வாழ்க திராவிடம்.

# "வீரசிம்மன்"

(நாடக நூல்)



ஆக்கியோன்

## இ. வி. கிரி

 [ விலை அணு 9

வாழ்க திராவிடம்.

# "வீரசிம்மன்"

(நாடக நூல்)



ஆக்கியோன்
இ. வி. கிரி,
பேலாப்பூர்.



[விலை அணா 9

# முன்னுரை

தோழர்களே, தாய்மார்களே! சீர்திருத்த கருத்துக்களை அமைத்து புதிய முறையிலே இந்நாடகத்தை எழுதியுள்ளேன். அச்சு பிழை திருத்தத்தை சரிவர பார்க்காததினுல் சில இடங்களில் எழுத்துப்பிழைகள் இருக்கின்றது. எனினும், ஆரம்பத்தில் இருந்து முடிவுவரைக்கும் உங்கள் மனதை கவரும்படி எளிய நடையில் என்னுல் ஆனவரை எழுதியுள்ளேன். யாவரும் படித்து ஆதரிப்பீர்களென்று எதிர் பார்க்கிறேன்.

வணக்கம்,

இ. வி. கிரி.

# கதா பாத்திரங்கள்

| | | |
|---|---|---|
| வீரசிம்மன் | — | கதாநாயகர் |
| தாரணிபதி | — | கதாநாயகரின் தோழர் |
| ஜெயந்தன் | — | கதாநாயகியின் தமையன் |
| தாமரைக்கண்ணன் | — | ஜமீன்தார் |
| அனந்தன்<br>பரந்தாமன்<br>ஜெயசங்கர்<br>ரமணன் | — | ஜமீன்தாரரின் தோழர்கள் |
| கமலக்கண்ணன் | — | ஜமீன்தாரரின் மானேஜர் |
| குப்புஸ்வாமி | — | ஜமீன்தாரரின் குமஸ்தா |
| ரங்கஸ்வாமி | — | ஜெயந்தரின் குமஸ்தா |
| கார்த்திகேயன் | — | கமலக்கண்ணனின் தோழர் |
| சங்கரதேவர் | — | சப் இன்ஸ்பெக்டர் |
| குள்ளன்<br>குண்டன்<br>வீரமுத்து | — | ஜமீன்தாரரின் ஆட்கள் |
| திலர்தவதி | — | கதாநாயகி |
| வனிதா | — | தாமரைக்கண்ணனின் தங்கை |
| ரமணி | — | குப்புஸ்வாமியின் மனைவி |
| அன்னம்மாள் | — | கமலக்கண்ணனின் மனைவி |

# "வீரசிம்மன்"

---

## காட்சி. 1.

இடம் நந்தவனம் நேரம், மாலை ஆறுமணி.

(திலர்தவதி நந்தவனத்தில் மேடையின் மேல் அமர்ந்துக்கொண்டிருக்கும் போது, தாமரைக்கண்ணன் வருகையும் உரையாடலும். தாமரைக்கண்ணனின் நண்பர்கள், அநந்தன் பரந்தாமன் இருவரும் தாமரைகண்ணனுக்கு உதவி செய்வதும்.)

திலர்தவதி.-(மேடையின்மீது அமர்ந்துக்கொண்டு சந்திரன் உதயமாவதை ஆவலுடன் பார்த்து) மலையின் மறைவில் இருந்து விடுதலையடையும் இம்மதி இயற்கைக்கு எவ்வளவு அழகை கொடுக்கிறது! இப்பொழுது நான் எனக்கேற்ற காதலரோடு (என்றுகூறி பெருமூச்சு விட்டுக்கொண்டு, கையில் இருந்த புத்தகத்தைத்திறந்து பார்த்துக்கொண்டிருக்கிருள்)

தாமரைக்கண்ணன்.-(தன்நண்பர்களை ஓர்புரம் இருக்கச்செய்து திலர்தவதி இருக்கும்பக்கம்வந்து)பரந்தாமன்! பரந்தாமன்!! பரந்தாமன்!! எங்கையா போயிட்டே.

திலர்தவதி.-என்னைத்தவிர வேறு எவரும் இல்லாத இங்கு யாரைத் தேடுகிறீர்?

தாமரைக்கண்ணன்.-(திலர்தவதியைத்திரும்பிப்பார்த்து)யாரையா? நான் கூப்பிடுகிறேனே அவரை!

திலர்தவதி.-யாரை கூப்பிடுகிறீர்?

தாமரைக்கண்ணன்.-நான் சற்று முன் பெயர் சொன்னேனே இவரை ம் மு, இல்லை! இல்லை!! அவரை.

திலர்தவதி.-என்னய்யா உளருகிறீர்! உமக்குப்பயித்தியம் பிடித்து விட்டதா என்ன?

தாமரைக்கண்ணன்.-ஆம், பரந்தாமனை தேடிவந்த எனக்கு உன்னைக்கண்டதும் பரமானந்தத்தை அடைய பயித்தியம் பிடித்து விட்டது.

திலர்தவதி.-ச்சு ச்சு, கிட்டாத பயித்தியம் பிடித்து விட்டதே தேடிப்பாருங்கள்.

தா. க.—தேடிப்பார்த்துத்தான் அது இருக்கும் இடத்தை அடைந்து விட்டேனே அதன் ஆனந்தத்தை அடையவேண்டியது தான் தாமதம்.

தி. வதி.—தாமரைக்கண்ணரே நீர் யாரிடம் பேசுகிறீர் என்பது ஞாபகம் இருக்கட்டும். தானுக ஆபத்தில் சிக்கிக்கொள்ளாதீர்!

தா. க.—என் கண்ணுக்கு இன்னும். சாலேஸ்திரம் வரவில்லையே என் ஆருயிர் நண்பர் ஜயசங்கரின் தங்கை என்பது எனக்குத் தெரிகிறது.

தி. வதி.—கண்ணுக்கு சாலேஸ்திரம் இல்லைஎன்பது எனக்குத்தெரிகிறது(அசட்டுச்சிரிப்புடன்)உமது மூளைக்குச்சாலேஸ்திரம் போல் இருக்கிறதே என்று தான் கவலைப்படுகிறேன்.

தா. க.—திலர்தம்! உன்னை இத்தோடுகணக்கில்லாததடவைசந்தித்து என்மனதில் உள்ளதைஎடுத்துரைத்தும் நீ அதனை அறியாது பேசுகின்றனையே! இது தகுமா?

தி. வதி.—என்ன நீர் உம்மனதில் உள்ளதை எடுத்துரைத்ததும், நான் அதை அறியாது இருப்பதும்!

தா. கா.—என்னவா! நான்உன்னை காதலிக்கின்றேன் என்பது தான்!

தி. வதி.—நான் தான் உம்மைக்காதலிக்கவில்லைஎன்று கணக்கில்லாத தடவை உம்மிடம் கூறி இருக்கின்றேனே!

தா. க.—திலர்தம் நீ அவ்வாறு சொல்வது தகுதியா? நான் உனக்கேற்ற நிலைமையும் அழகும் உடையவன் அல்லவா! நீயும் ஓர் ஜமீன்தார் மகள்; நானும் ஓர் ஜமீன்தார் மகன்?

தி. வதி.—உம்முடைய அழகையும் அந்தஸ்தையும் பற்றி நீர் புகழ வேண்டிய அவசியம் இல்லை. தன் மீது விருப்பமில்லா கன்னிகையை வற்புறுத்துவது குட்டிச்சுவற்றில் முட்டிக் கொள்வது போலாகும் இங்கு இப்பொழுது என் தோழி ஒருத்தி வருவாள் மரியாதையாக நீர் இவ்விடத்தை விட்டுப்போய்விடும்!

தா. க.—(கோபத்துடன்) என்ன! மரியாதையாகவா! பேஷ்; நான் இன்று உன்னைவிட்டுப்போவதற்கு வரவில்லை உன்விவாகத்திற்கு உன் அண்ணன் உனக்கு அளித்திருக்கும் உரிமையும் உன் மர்மமும் எனக்கு நன்ருகத்தெரியும்.

தி. வதி.—என் அண்ணன் எனக்கு உன்னைப்போன்ற மடையர்களைக் கணவனுக்கிக்கொள்ள உரிமை கொடுக்கவில்லை என்பதும் உனக்கு தெரியும் என்று நினைக்கின்றேன் (அசட்டுச் சிரிப்புடன்) விட்டுப்போகவரவில்லையாம் கட்டிப்போக வந்தாப்ல இருக்கு! மரியாதையாக இவ்விடத்தை விட்டு நட, இல்லையேல் ..............

தா. க.—இல்லையேல்; என்னசெய்துவிடுவாய். இன்று நீ சம்மதப்பட்டாலும் சரி; படாவிட்டாலும் சரி; பலவந்தமாக வாவது உன்னை சேரப்போகிறேன் (என்று சொல்லிக் கொண்டே நெருங்குகிறான்)

தி. வதி.—அடே மடையா; என்ன நெஞ்சத்துணிவடா உனக்கு! நீ என்னைத்தொடுவையேல் உன் உயிருக்கு ஆபத்து நேரிடும். (என்று சொல்லிக்கொண்டே பின் வாங்குகிறாள் அப்பொழுது தாமரைக்கண்ணன் விரைந்துசென்று அவள் கைகளைப் பிடிக்கிறான்)

தி. வதி.—ஐயோ! ஐயையோ! இந்த அநியாயத்தைத்தடுக்க எவரும் முன்வரமாட்டார்களா! அடேபடுபாவி; வீணாகக்கெட்டுப் போகாதேடா!

## பாகம். 2.

(வீரசிம்மனும் தாணிபதியும் நந்தவனத்தில் உலாவிக்கொண்டுவருகிறார்கள்)

தரணிபதி-அண்ணே! நம்பவாத்தியாருக்கு இந்துக்கள் என்னாலே'' பூர் இன்னு வருதே! அது இன்னான்னே!

வீரசிம்மன்—அவர் ஆண்மையுடைய மகம்மதியனின் மகனும். அது தான் அதற்கு காரணம்.

த. பதி.—ஏ அண்ணே! உடம்பைபாத்தா ஊத்தசரீரமாட்ட இருக்கே! நீங்க என்னமோ உளர்ரீங்களே!!

வீ. ன்.—சரி! சரி! வா சீக்கிரமாக வீட்டிற்குப்போகலாம் (முன்னே நடக்கிறான்)

த. பதி.—அண்ணே! அண்ணே!! ஓ அண்ணே!!! இந்தக்குரலைக் கொஞ்சம் கவனியுங்க!

"ஐயோ, ஐயையோ இந்த அனியாயத்தை தடுக்க எவரும் முன்வர மாட்டார்களா! அடே படுபாவி வீணாகக்கெட்டுப்போகாதேடா! (என்று திலர்தவதி கூவினது இவர்கள் காதில் விழுந்தது)

வீ. ன்.—ஏண்ணே! இது பெண் குரல் போல் அல்லவா இருக்கு

த. பதி.—அட பெண்ணோ? பேயோ? எதுவாயிருந்த நமக்கென்ன!

வீ. ன்.—தாணிபதி! கிளம்பு! நாம் இருவரும் அக்குரல் வரும் இடத்திற்குப்போய் தான் வரவேண்டும்! (என்றுசொல்லிக் கொண்டே ஓடுகிறான்.)

த. பதி.—அண்ணே! அட அண்ணே!!

வீ. ன்.—(ஓடிக்கொண்டே) அட வாப்பா!

த. பதி.–இது என்னடா தொந்தரவாய் போச்சி! யாராலே கெட்டேண்ணு நோருலகெட்டேன்ற மாறியல்லே இருக்கு என்னமோ ஓடுருரே! சரி, போயிபாப்பம் (இவனும் பின்னால் போகிருன்)

## காட்சி. 3.

(வீரசிம்மன் வேகமாக ஓடிவருகிறன்)

தி. வதி.–அடேபாவி! என்கையை விடுடா! அழிந்துவிடாதேடா! இதைக்கண்ட வீரசிம்மன் தாமரைக்கண்ணன் திலர்தவதியை வலிய வற்புறுத்துவதை தெரிந்துக்கொண்டு தாமரைக் கண்ணனைப் பிடித்துத்தள்ளி கன்னத்தில் ஓர் அறை கொடுக்கிருன். உடனே இருவருக்கும் கை கலக்கிறது; ஒருவனை ஒருவன் தள்ளியும் அடித்துக்கொண்டு இருக்கும் போது மறைவில் இருந்த பரந்தாமனும் அனந்தனும் வருகிருர்கள். இதற்குள் தரணிபதியும் வந்து விடுகிருன்; பரந்தாமன் முன்பாகவும் அநந்தன் பின்பாகவும் விரைந்து வந்தார்கள். அதைக்கண்ட தரணிபதி ஓங்கி ஓர் குத்து கன்னத்தில் குத்தினன் பரந்தாமனுக்கு நல்லஉடல் வலிமை இல்லாததால் உடனே கீழே விழுந்து விட்டான். விழுந்தவனை மறுகுத்து குத்துவதற்குள் பின்னால் ஓடிவந்த அநந்தன் வேகத்தை நிறுத்த முடியாமல் கால் தடுத்து பரந்தாமன் மேல் விழுகிருன். தரணிபதி அவன் விழும்போதே பலமாக ஒரு குத்து குத்தினன் ஆநந்தனின் மூக்கில் குருதி குதித்தோடிற்று, அனந்தன் நல்ல வலிமையுடைவனுக இருந்தபோதிலும் அவனைத் தோற்கடிக்கக்கூடிய பன்மடங்கு, திறம் பெற்ற தரணிபதி தன்னிடம் இருந்த பிச்சுவாவை கையில் எடுத்தான். அனந்தனும், பரந்தாமனும் ஓடிய இடமே தெரியவில்லை. உடனே விரைந்து சென்று தாமரைக்கண்ணனை கழுத்தில்கட்டிக் கொண்டிருந்த டையை பிடித்திழுத்து முகத்தின்மீது ஓங்கி ஓர் குத்துக்குத்தினன். நண்பர்கள் இருவரும்ஓடிவிட்டதையும் தாணிபதி இங்கு வந்து சேர்ந்ததையும்கண்ட தாமரை கண்ணனுக்கு அஸ்திவாரத்தில் ஆட்டம் கொடுத்துவிட்டது. பேசாமல் இவர்கள் இருவரையும் முறைத்துப் பார்த்துக்கொண்டே போய்விட்டான். அவன் சென்று மறைந்ததும்.

தி. வதி.–(முகத்தை இறக்கிக்கொண்டு நாணத்துடன்) நீங்கள் வராமல் இருந்தால் என் கதி என்ன ஆவது!

வீர.–(புன்சிரிப்புடன்) அவன் கெட்டான்; அறிவில்லாதவன்!

த. பதி.—பணத்திமிரண்ணே ! பணத்திமிறு ! ஜமீன்தார்மகனுச்சே இல்லேயோ கை வரிசையைக்காட்ராறு. கைட்டிடமாட் டேனு!

தி. வதி.—இங்கு நடந்தவை எல்லாம்...............

வீர.—வந்தவுடனே புரிந்துக்கொண்டேன், அற்பன்.

தி. வதி.—உங்களிடம் தனித்து சில காரியங்கள் பேசவேண்டும். நாளே உங்களேத்தனியே இங்குச்சந்திக்க முடியுமா?

த. பதி.—வரசொன்னீங்கண்ணுவராரு! அதைப்பத்தி என்னுங்க. ஆனு அவுங்களேயும் வரசொல்லாதிங்க.

வீர.—உஸ் சும்மாயிரு ! திலர்தவதி ! நான் நாளே இங்கு நிச்சயமாக வருகிறேன் நீ மட்டும் மறக்காதே !

தி. வதி.-நீங்கள் இன்று செய்த நன்றிக்குப்பதில் என்வாழ்நாளேயே உங்களிடம் ஒப்படைக்கத்தயாராக இருக்கிறேன் நாழிகை ஆகிவிட்டது. நான் வரட்டுமா

வீர.—செய், திலர்தம்!

த.பதி.—இல்லீங்க நாளேக்கு இங்குவாரதை நீ ங் க மறந்தூடப்போ ரீங்க! அண்ணுவந்திருப்பாரு! (திலர்தம்சிரித்துக்கொண்டே போகிருள்.) (போனபின்)

வீர.—என்ன அழகு! அன்னம் பழித்த நடையையும், கயல் மீனேப் போன்ற விழியையும், களங்கமில்லா முகத்தையும் உடைய இவள் யாருக்கு மனேவியாகப்போகின்ருளோ.

த. பதி.—அண்ணே! நான் சொல்லட்டுமா?

வீர.—(ஆவலுடன்) யாருக்கு! உனக்கு தெரிந்தால் சொல்லு!

த. பதி.—நம் ஆருயிர் நண்பரும், வீரதீர மனேதிடமுடைய திராவிடருக்குள் ஒருவருமான உயர் திருவாளர் வீரசிம்மனுக்கு......

வீர.—(அசட்டுச் சிரிப்புடன்) இதற்காகவா இவ்வளவு தூரம் நீட்டினுய்! பெரிய ஜமீன்தாரின் மகளாகிய அவள் எங்கே!

த. பதி.—எல்லாம் உங்ககிட்டதான்! நீங்கள் இன்று செய்த நன்றிக் காக என் வாழ்நாளேயே உங்களுக்கு ஒப்படைக்க தயாராக இருக்கிறேன்னு சொன்னுங்களே இன்னும் என்னுவா ! வாங்கண்ணே போகலாம்! போய்விடுகின்றனர்.

## காட்சி. 4.

இடம்— தாமரைக்கண்ணன் வீடு

தாமரைக்கண்ணன், அநந்தன், பரந்தாமன், ஜெயகுமார், ரமணன்.

தா. க.–(கோபக்குறியுடன்) வெளியில் செல்லவும் வெட்கமாக இருக்கிறது. நம்மை நேற்று அவமதித்த அந்த பிச்சக்கார பயலை என்ன செய்வது என்பதற்குப்பிரமாதமானயோசனை செய்கிறீர்களே!

பர. மன்.–அவனைப்பழிக்குப்பழிவாங்காமல் விடுவதா? என்ன!

அ.–என் மூக்கிலே கையை வைச்சா ரத்தம் சொள சொளவென்று ஊத்துது அண்ணே! இன்னும் நாலுநாள் பொறுத்து வேணுண்ணு பார்க்கலாம்!

ஜெ. ச.–(அனந்தனை நோக்கி) எண்டா உனக்கு வெட்கமில்லே! நாலு நாள் பொறுத்தா! (தாமரைக்கண்ணனைப்பார்த்து) இன்றைக்கு அந்த பய மூக்கையோ அல்லது பல்லையே ஒடைக்காம விடறது இல்லே! நீங்க ஒண்ணு பாருங்கோ! ஆமா! அதுமட்டும் நிச்சயம்.

அ—நான் இன்ரைக்கு ஆஸ்பத்திரிக்குப் போனேம்பா! அந்த பேண்டேஜ் கட்றபய இல்ல, அதாம்பா கம்பவுண்டர் நாலு நாள் லீவு கேட்டுக்கொண்டு எங்கேயோ போயிருக்சானும்! அவன் வந்தா ஒண்ணு வீரசிம்மனைமட்டும்; இல்ல! சிம்மத்தையே அடிக்கணும்ணுலும் நான்வர ஆமா, அதோட வீரசிம்மன் ஒருத்த இருக்க தரணிபதி ஐந்து பேரையும் கூட சாப்பிட்டிடுவான். பணத்துக்கு ஆசைப்பட்டுக்குனு உடம்பைக்கெடுத்துக்கினு! ஆஸ்பத்திரியிலே அவனும் லீவிலே போயிட்டா!

தா. க.—சரி! சரி!! உன் காலக்ஷேமத்தை நிறுத்து! பேடிப்பயலே! எனக்குக்கூடத்தான் அவன் குத்தின ஒரு குத்து ஒம்பது குத்து மாறியா இருக்குது! அதுக்கு பழிக்குபழிவாங்காமல் விட்டுடாத்தா!

ஜெ. ச.–சாயங்காலத்துக்கு கிளம்புங்கண்ணே போகலாம்!

ரமணன்.–போவது இருக்கட்டும்! அனந்தன் சொல்றதையும் ஆலோசனை பண்ணுங்க.

ஜெ. ச.–பேண்டேஜிக்கு தானே! அவங்கெட்டா பேடிப்பய! வாய்யா! பார்க்கலாம் அவன் என்ன அவ்வளவு சீமானு? என்ன! (ஐவரும் கிளம்பிப்போகிறார்கள்)

## காட்சி. 5.

இடம் ஜெயந்தன் வீடு ஜெயந்தன், திலர்தவதி.

ஜெயந்தன் எதையோ படித்துக்கொண்டிருக்கிறார். அவ்வமயம் அவர் தங்கை திலர்தவதி அவருக்கு டிபன் எடுத்துக் கொண்டுவருகிறாள்.

தி. வதி.—காப்பி சாப்பிட்டுங்கோண்ணா;
(ஜெயந்தன் வாங்கி சாப்பிடுகிறார்)

ஜெ.—கோ கோ போட்டாப்போல ருசியா இருக்குதே.

தி. வதி. ஆமாண்ணா, அதிருக்கட்டும்; உங்களுக்கு எங்க காலேஜிலே வீரசிம்மர் என்று ஒருவர் இருக்காரே, அவர்தெரியுமாண்ணா!

ஜெ.—நல்லா தெரியும் அவன் எத்தனையோ டிராமாக்களில் எல்லாம் நடித்திருக்கான். அதோட படிப்பிலேயும் கெட்டிக் காரண்ணு அவங்க வாத்தியார் சொல்வார்; ஆனால்—

தி. வதி.—என்னண்ணா, ஆனால்

ஜெ.—ஒன்றும் இல்லை. அவன் கவிதை கட்டுரை எழுதுவதிலும் கெட்டிக்காரன் தான்; ஆனால்—

தி. வதி.—என்னண்ணமறுபடியும் ஆனால் ஆனால் என்றுசொல்றீங்க!

ஜெ.—ஒன்றும் இல்லேம்மா, அவன் குடும்பம் கொஞ்சம் ஏழ்மை யான நிலைமையில் இருக்கிறது; அவனுக்குப் பணஉதவி செய்ய வேண்டும் என்பது எனக்கும் உண்டு, பையன் முன்னுக்கு வரக்கூடியவன் அவ்வளவு தான்;

தி. வதி.—(சிரித்துக்கொண்டே) இதுக்காண்ணா! ஆனால் ஆனால் என்று சொல்லி என்னை பயித்தியக்காரி ஆக்கிட்டீங்க!

ஜெ.—அவனைப்பற்றி நான் சொல்லும்போது நீ பயித்தியக்காரி ஆனதற்கு காரணம்?

தி. வதி.—(முதலில் மிரண்டு, பிறகு) ஒன்றும் இல்லை அண்ணா! அவர் நேற்று ஒருடிராமாவில் நடித்தார்பாருங்க! ரொம்ப அருமையாஇருந்தது அண்ணா! (சிரித்துக்கொண்டே) அவரோடு தரணிபதியும் ஒருவர்.

ஜெ.—அவனா சிரிப்புகாட்டுவதில் அவனைவிட ஆள் உண்டா என்ன! நகைச்சுவை அரசருக்கு மாணாக்கன் என்றே சொல்லலாம் அதோடு அவனுக்கு நல்ல திரேககட்டும் உண்டு.

தி. வதி-எங்கிட்டபேசிகிட்டே இவ்வளவு ஊக்கமா படிக்கிறீங்களே என்ன அண்ணு அது ?

ஜெ. ச.-இது சிறிதுகாலத்திற்கு முன் வெளிவந்த திராவிடநாடு பத்திரிகை. இதில் இழிவை யொழித்த எலிசபத் என்று ஒரு கட்டுரை எழுதிஇருக்கிறது: இதோபார் இதைதான் படிக்கிறேன்: திலர்தம் நீயும் இதைப்போல் வருவாயா ?

தி. வதி.-ஆமாண்ணு, உங்களுக்கு இதுதான்வேலே எனக்கு நாழிஆச்சி! நான் காலேஜிக்குபோகப்போகிறேன் (என்று சொல்லிக்கொண்டே போய்விடுகிருள்)

ஜெ. ச.-(புருவம் இரண்டையும் நெருக்கித் தூக்கிப் பிடித்துக் கொண்டு) இவள் பேசுவதில் இருந்து வீரசிம்மன்மேல் ஏதோ பற்று இருக்கிறது என்று தெரிகிறது அவள் அபிப்பிராயத்தைக் கெடுப்பானேன் (என்று தனக்குத் தானே சொல்லிக்கொண்டு அவ்விடத்தைவிட்டு கிளம்பு கிருர்.)

## காட்சி. 6.

இடம்—மர்மஅறை.

தாமரைக்கண்ணன், ஜெயசங்கர், அனந்தன், பரமானந்தம்.

தா. க.-எய்யா! ஜெயசங்கர்! அந்தகணக்கபிள்ளே நான்உங்களுக்கு அடங்கி வேலேசெய்ய முடியாது. நீங்க என்ன வேணும் ஆனுலும் பண்ணிக்கீங்க என்னுனே அவனேச் சும்மாதானே விட்டுட்டிங்க !

ஜெ. ச.-என்னுங்க உங்களே, அவன் எதிர்த்துப்பேசி அவனேச் சும்மாவிடுவதா ! ஆளேப் பழுக்கபாத்து விட்டைப்பிரிச்சி கிட்டு ஓடிப் போவென்று நேத்திக்கே துரத்தியாச்சே !

தா. க.-ஆமாம் ! நம்மகிட்ட கேஸ் ஜெயிச்சிகிட்டு போனுனே, அந்த செட்டியார் கதை என்ன ஆச்சி !

அ.-அடக்கடவுளே ! இவ்வளவுதானு ! இதோ வந்தூட்டேன் இருங்க ! (அருகில் இருந்த மேஜைமேல் இருந்த தினமணி பேப்பரை எடுத்து வந்து ஓர் இடத்தைக் குறிப்பிட்டுக் காட்டி) செட்டியார் கொலேயுண்டார். கொலேசெய்தவர் யார் என்று தெரியவில்லே, நம்மகுள்ளன் வேலே எப்படி ?

தா. க.–இல்லாம போயிட்டாலும் குள்ளன் பலே குள்ளனய்யா! முன்ன அந்த வக்கீலே பார்த்தவனும் இவன்தானே இவனுக்கு என்ன தாலாம்?

அன.–அதிருக்கட்டுங்க கொடுக்கிறது. நம்ம கிளார்க் குப்புசாமியினுடைய மனைவியைப்பற்றி ஞாபகம் இருக்கா?

தா. க.–(வெகு சந்தோஷமாக) ஆமாம். என்ன அனுகூலம் ஏதுவாவது உண்டா?

அ.–அனுகூலமில்லாமலா இப்பொழுது அதைப்பத்தி எடுத்தேன் குப்புசாமியை நைஸ்ஸா என்னப்பா இந்தமாதம் கோட்டா வந்திருக்கு! நீ போனல்தான் நடக்கும் மீதி எல்லாம் திருட்டுப்பசங்கள் இருக்கும்போதே இல்லெண்ணு வாங்க போய் அதை எடுத்துகிட்டு சீக்கிரமாத்திரும்பூண்ணு ரூபாயும் இரநூறு கொடுத்தனுப்பினேன் அவன் போகும் போது கடிதம் ஒன்றுகொடுத்து இதை வீட்டில் கொடுத்து விடுங்கள் என்று என்னிடம் சொன்னன்.

தா. க.–அப்புறம்!

அ.–அவசரப்படாதிங்க! அவன் போயிட்ட உடனே நானே நேரா அவங்க விட்டுக்குப்போய் அவகிட்ட அவங்கொடுத்தக் காகிதத்தை கொடுத்தேன் அவள் வாங்கிப் படித்துப்பாத்து விட்டு இருங்க காபி சாப்பிட்டுட்டுப் போங்கோண்ணு, பிருவோட உட்கார்ந்தேன்.

தா. க.–அட சீக்கிரமா முடிப்பாண்ணு.

அனந்.–இவ்வளவு அவசரப்பட்டா என்னல் முடிக்க முடியாது.

ஜெயரங்.–(வேண்டுவதுபோல்) சரி, சரி நீ கெட்டிக்காரனுச்சே (உரத்த குறலில்) சொல்லுட்டாண்ணு! இன்னமோ!

அ.–உட்கார்ந்தனு! உட்கார்ந்த காபி கொண்டுவந்து கொடுத்தா. அடடா அவ அழகும் அவ நடையும்.

பரங்.–டேச்சே விழயத்தைச்சொல்லுடாண்ணு அழகும் நடையும், வங்காயமும் வெள்ள பூண்டும்னு உளர்ரயே!

அ.–அப்போ நான் சொல்றது விஷயம் இல்லேயா? அப்போ நீயே சொல்லு.

தா. க.–வீண் காலட்சேஷமம் வேண்டாம் முடிவை சொல்லு!

அ.–இல்லே! இல்லே!! கோவிச்சிகாதிங்க அவகிட்ட உங்களேப் பற்றி சொன்னேன் அவ பேசாம மவுனமா இருந்தாட்டா.

பரங்.–இன்னுண்ணு சொன்ன?

அ.–அதாங்கிடையாது இங்கே! முடிவுதாங்க வேணும்! அவ பேசாமல் இருந்ததிலிருந்து ஐயாவின்மேலே ஆசை தாண்ணு தெரியுது. அதனலே இண்ண ராத்திரிக்கு ஐயாவுக்கு அங்கேதான் முகாம் எப்படி........?

ஜெய.—ரைட்! மணி 3 ஆயிடுத்து நேராப்போய் வீரசிம்மனை ஒருகை பார்த்துகிட்டு ராத்திரிக்கு குப்புசாமி வீடுதான் காம்பு (யாவரும் கிளம்புகின்றனர்).

## காட்சி-7

இடம் நந்தவனம்

(வீரசிம்மனும் தாரணிபதியும் மேடையின்மீது உட்கார்ந்துக்கொண்டு)

தாரணி.—(கைகளைத் துடையின்மீது தட்டிக்கொண்டு) எண்ணே! வரேண்ணு சொன்னுங்களே! இன்னுண்ணே இன்னும் வரக்காணோம்!

வீர. சி.—(கோபத்துடன்) எல்லாம் வருவாங்க! நீ இருப்பதை பார்த்தா வரவங்ககூட வரமாட்டாங்க!

தாரணி.—(சட்டென்று எழுந்து நின்றுக்கொண்டு பதத்திற்கு தகுந்தாப்போல் தலையையும் கையையும் ஆட்டிக்கொண்டு) எல்லா வருவாங்க! அது சரி! நீ இருக்கிறதைப்பார்த்தா வரவங்ககூட வரமாட்டாங்க! அது எப்படி? (தலையை ஆட்டிக்கொண்டே) ம்மு! அண்ணே! புரிஞ்சிடுத்து! இவனுக்கு என்னமோ வராப்பல இருக்கு! இவ போய் அப்படியிருக்கா! ஏதாவதுண்ணு இவனுக்குகுறல்கொடுங்க (வீரசிம்மன் பேசாமல் இருக்கிருன். தாரணிபதி போய் விடுகிருன்—வீரசிம்மன் மறுபடியும் கையில் இருந்த புஸ்தகத்தைப் படிக்கிருன்—திலர்தவதி அவ்விடம் வந்து சற்று நேறம் நின்றுவிட்டு).

திலர்.—அதிக ஊக்கத்துடன் வாசிக்கின்றீர்போல் இருக்கே!

வீர.சி—அப்படி ஒன்றும் இல்லை! நீங்கள் வந்ததை நான் கவனிக்கவில்லை. நீங்கள் நேற்றயதினம் உத்திரவிட்டபடி இப்பொழுது வந்திருக்கிறேன். என்னை அழைத்ததின் காரணத்தை...........!

திலர்த.—(அருகில் அமர்ந்து,—ஆச்சர்யத்துடன்) நான் உங்களை அழைத்ததின் காரணம் உங்களுக்கு இன்னமுமா புறியவில்லை.

வீரசிம்.—ஆம்.

திலர்த்த.—உண்மையிலா!

வீரசிம்.—உண்மையில்

திலர்த.—(தோளின்மேல் கையை வைத்து அவன் முகத்தை இவள் பக்கம் திருப்பி) இன்னமும் நீங்கள் என்னை வருத்துவது தகுதியல்ல.

வீரசிம்.—மங்கையர்க்கரசே! தனவந்தன் மகளாகிய உனக்கும் தரித்திரனின் மகனுகிய எனக்கும் என்று நினைத்தால்தான்?

தி. வதி.—வீரசிம்மரே! (அசட்டுச்சிறிப்புடன்) இதற்காகவா கஷ்டப்படுகிறீர் (வீரம்ததும்பும் குறலுடன்) ஏழைமீது இரக்கமில்லாமல் ஏமாற்றி பணத்தை திரட்டுபவன் பணக்காரன். ஏழையின் மீது இரக்கங்காட்டுபவன் தரித்திரன் இவ்வளவு தானே! (நிதானமாக) இதில் எது மேலானது?

வீர.— திலர்தம்! உன் வீரம் ததும்பும் பேச்சு என்னை திருப்பிப்பேச ஒட்டாமல் தடுத்துவிட்டது. (ஒரு முத்தம் கொடுத்து அருகில் இருந்த தண்ணீர் தொட்டியைக்காண்பித்து) வா! அங்குபோகலாம். (வீரசிம்மன் போகிறான் திலர்தவதி பின்னால் போகிறாள் இருவரும் தண்ணீர் தொட்டியின் மேடையின் மீது உட்காருகின்றனர். திலர்தவதி வீரசிம்மனின் மார்பின் மீது சாய்ந்துக்கொள்கிறாள்.)

வீர.—திலர்தம்! நீ என்னை உண்மையில் முழுமனதுடன் காதலிக்கிறாய் என்பதற்கு......(உடனே திலர்தவதி தன்கையில் இருந்த மோதிரத்தை கழற்றி அவன் சுண்டுவிரலில் போட்டுக்கொண்டே)

தி. வதி.—இதுவே நான் உங்களைக்காதலிப்பதற்கு அடையாளம். (தரணிபதி வெகு வேகமாக ஓடிவந்து இரண்டு குறல் உரக்கக்கூவிவிட்டு,)

த. பதி.—அண்ணே! அண்ணே! ஓ அண்ணே! நாயின்னாத்த பண்ணுவ! (அங்கேயே உட்கார்ந்துக்கொண்டு கையையும் காலையும் உதைத்துக்கொள்ளுகிறான். வீரசிம்மன் இவன் அருகில் வருகிறான் இவனும் எழுந்துக்கொள்ளுகிறான்.)

வீர.—என்னப்பா அது! நடந்ததை சொல்லு!

த. பதி.—நேத்திக்கி ஒதைபட்டுகிட்டு போன அந்தப்பயக இன்னைக்கும் வராங்க! இவங்களை இந்தச்செடிப்பக்கம் மறைந்திருக்கச்சொல்லுங்க! அவங்கபோயிட்டபிறகு பார்த்துக்கலாம்.

வீர.—திலர்தம்! நீ அந்த செடிகளுக்குப்பின்னால் ஒளிந்துக்கொண்டிரு! அவர்களை அப்படியே அனுப்பிவிட்டு வந்து விடுகிறோம். (திலர்தவதி ஒளிந்துக்கொள்ளுகிறாள். வீரசிம்மனும் தரணிபதியும் வருபவர்களை எதிர் நோக்கிப்போகிறார்கள். எதிரில் அவர்கள் வருவதைத்தெரிந்துக்கொண்டதும் அருகில்இருந்த செடிகளில் மறைந்துக்கொள்ளுகிறார்கள்.)

தா. க.—ஜெயசங்கர் நாம் யாவரும் ஆட்டுமந்தையைப்போல் போனால் அவன் தப்பித்துக்கொண்டாலும் தப்பித்துக்கொள்வான். அதனாலே முதலிலே பரந்தாமனை அனுப்பினால் அவன் போய், அவங்க இருக்காங்க இல்லைன்னு வந்துசொன்னால் பிறகு நாம்யாவரும் போகலாம். என்ன பரந்தாமன்!

பர.—ஊ உ!!! ஒன்றும் இல்லே! என்னயா போகச்சொல்றீங்க, எங்கம்மா என்ன எங்கபோனாலும் தனியா போவாதேண்ணு சொல்லி இருக்காங்க!

ஜெ.—பச்ச குழந்தையில்லா! போடா போ! எப்படி இருந்தாலும் நீ தான் போய் ஆகவேண்டும்.

பர.—கோவிச்சிகாதீங்க! இதோ போரேன்! கடவுள் இருக்காரு. (பரந்தாமன் இவர்களிடம்போகிறேன்என்றுசொல்லிவிட்டு பயந்துக்கொண்டே தரணிபதியும் வீரசிம்மனும் இருக்கும் இடத்தை அடைந்தான்.) அவன் கன்னத்தின் மீது கும் என்று ஓர்குத்து உழுந்தது அவ்வளவுதான் வாயைத் திறக்காமல் கையை ஆட்டாமல் கீழேவிழுந்தான். உடனே யிவன் கைகளையும் கால்களையும் சேர்த்துக்கட்டி பக்கத்தில் இருந்த செடிக்கு மறைவில் போட்டுவிட்டான் தரணிபதி.

ஜெ.—போனவனே யின்னும் காணுமே

ரம.—ஆம். மடப்பயல் போனகாரியம் யின்னது என்று யிதுவரை வந்து சொல்லவில்லே.

தா. க.—அப்பொ மிஸ்டர் ரமணன்! நீங்கபோயிட்டு வாங்க!

ரம.—நான் விளையாட்டுக்கு சொன்னேன்.

ஜெ.-நான் நிஜமாகவே சொல்கிறேன் போயிட்டு வாருங்கள்!

ரம.—சரி, வருகிறேன்!

ரமணன் சுற்றி சுற்றிப்பார்த்துக்கொண்டே வருகிருன். அவன் வீரசிம்மன் பக்கமாகவந்ததும் வீரசிம்மன் அவனே நோக்கி ஓர் குத்து குத்தினன் அது ரமணனின் மார்பில் விழுந்தது அவனுக்கும் திடகார்த்தமான சரீரமாகையால் அதைச்சமாளித்துக்கொண்டு ஜோபியில் யிருந்த ரிவால்வரை எடுத்தான் அதைக்கண்ட தரணிபதி அவன் கை பின்புரமாகதிருப்பி ரப்பையின்மேல் ஒருகுத்து குத்தினன். பூட்டு விலகிவிட்டது தரணிபதி ரிவால்வரைப்பிடுங்கினன், வீரசிம்மன், வாயில் கைகுட்டையை அடைத்தான் முன்பு செய்ததைப்போலவே யிவனுக்கும் கைகளையும் கால்களையும் கட்டி இவனேயும் செடி மறைவில் போட்டுவிட்டார்கள். அதை எப்படியோ அனந்தன் பார்த்து விட்டான் உடனே தாமரைக்கண்ணனிடமும் ஜெயசங்கரிடமும் சொல்லவே யாவருமாக வீரசிம்மனும் தரணிபதியும் இருக்கும் இடத்திர்க்கு ஓடிவந்தார்கள் இதற்குள் தரணிபதியும் வீரசிம்மனும் ஒளிந்து கொண்டார்கள். நான்கு புறமும் பார்த்துக் கொண்டே வந்த மூவரும் இவர்கள் இருக்கும் இடத்தை அடைந்தார்கள் அனந்தன் தரணிபதி இருக்கும் பக்கம் வந்தான். தரணிபதி ஓங்கி அறைந்து மூக்கில் ஓர் குத்து

குத்தினன். முன்னளே ரத்தம் வந்த இடமாகையால் இன்றையதினம் அதிகரத்தம் பிடுங்கிக்கொண்டது வலி தாளமுடியாமல் தப்பித்துக்கொண்டால் போதும் என்று திரும்பாமல் ஓடினன். அவனுக்கு அருகாமையில் இருந்த தாமரைக்கண்ணன் தரணிபதியை ஓர்குத்து குத்தினன் தரணபதி அதைத்தடுத்து அவன் கழுத்தின்மேல் ஓர் குத்து குத்தி வீரசிம்மன் இருக்கும் பக்கம் தள்ளினன். தள்ளும் பொழுது வீர்சிம்மன் தாமரைக்கண்ணனின் காலைத்தட்டி விடவே தாமரைக்கண்ணன் தாழே விழுந்தான். உடனே வீரசிம்மன் அவன் மார்பின்மேல் உட்கார்ந்து அவனை அமுக்கி பிடித்துக்கொண்டு தன் மனதில் உள்ள வஞ்சம் தீர குத்தினன். இதற்குள் ஜெயசங்கருக்கும் தரணி பதிக்கும் கை கலந்தது. இருவரும் மல்யுத்தத்தில் தேர்ச்சி பெற்றவர்கள். ஆகையால் ஒருவரை ஒருவர் வெகு விமரிசையாக அடித்துக்கொண்டும் குத்திக்கொண்டும் தள்ளிக்கொண்டும் இருந்தார்கள். தப்பி ஓடிய அனந்தன் திலர்தவதி இருக்கும் பக்கமாக ஓடினன். ஓடும்போது இவன் இடுப்பில் இருந்த ரிவால்வர் இவனையும் அறியாது தாழே விழுந்தது அதை கவனியாமல் அனந்தன் ஓடி மறைந்தான். ரிவால்வரைக்கண்ட திலர்தவதி அதை எடுத்துக்கொண்டு இனி நம் உயிருக்குப்பயம் இல்லை என்றுத் தைரியத்துடன் செடி மறைவிலேயே வந்து இவர்கள் சண்டை போடும் இடத்திற்குச் சமீபத்தில் நின்றுக்கொண்டு இவர்கள் சண்டை போடுவதைக் கவனித்துக் கொண்டிருந்தாள். வீரசிம்மன் எப்படியோ அசாத்தியமாக விட்டுவிட்டான். எழுந்த தாமரைக்கண் ணன் சற்று தலவில் ஓடி நின்று ரிவால்வரை எடுத்துக் கொண்டு.

தா. க.—தூக்கு கையை! (உடனே வீரசிம்மனும் தரணிபதியும் அவன் கையில் ரிவால்வர் இருப்பதைக்கண்டு கையை தூக்கி விட்டார்கள். ஜெயசங்கர் தன் ரிவால்வரைத் தடவி னன். அது எங்கையோ விழுந்து விட்டது. அவன் கையுக்குக் காணேம்! உடனே ஜெயசங்கர் இவர்களுக்கு அருகாமையில் வந்தான். இதற்குள் திலர்தவதி செடி மரைவிலேயே தாமரைக்கண்ணன் இருக்கும் இடத்திற்கு பின்புரம் வந்து அவன் முதுகுக்குச் சரியாக ரிவால்வரை வைத்து

திலர்த.—கையை தூக்கு! திரும்பினல் சுட்டுவிடுவேன் (என்றுள். தாமரைக் கண்ணன் தப்ப வழியில்லாமல் விழித்தான். இதற்குள் அவன் அருகில் இருந்த வீரசிம்மன் அவன் கையில் உள்ள ரிவால்வரைப் பிடுங்கிக்கொண்டான்.

தரணிபதி தன்னிடம் உள்ள ரிவால்வரை எடுத்து ஜெய சங்கருக்கு நேருக காண்பித்து.)

தரணி.—தூக்கு கையை! ம்மு!! (என்முன். ஜெயசங்கர் தப்ப வழி யின்றிக் கையை தூக்கினன். இருவரையும் வெளியே போகும் வழிக்கு நெராக நிற்க வைத்துவிட்டு)

வீர. சி.—ஐயோக்கிய சிகாமணிகளே! இனி இப்பேர்பட்ட உத்தி யோகத்தை எடுத்துக் கொள்ளாதீர்கள் ;—உம்! பிடியுங் கள் ஓட்டம்!

தரணி!—இருங்க! இருங்க!! போவிங்க!!! அப்படி அனுப்புவது சரியில்லேண்ணே! இவாளல்லாம் பெரிய மனுஷா! மேலும் ஜமீன்தார் (இருவரையும் பார்த்து) இதோ யிருங்க! வந் தூட்டேன், (அருகில் இருந்த கயிறை எடுத்து இருவர் முதுகும் படியும்படி கால், கை, இடுப்பு முதலியவைகளைக் கட்டிவிட்டு) போயிட்டு வரீங்களா (திலர்தவதியையும் வீரசிம்மனையும் பார்த்து) வாங்க! நாமும் போகலாம். (திலர்தவதி தரணிபதி, வீரசிம்மன் யாவரும் போய் விடுகி ருர்கள். பிறகு)

ஜெய.—கழுதைப்பயல்! எங்கே போய்விடுவான்? பார்க்கலாம்.

தா. க,—பார்ப்பது பிறகு இருக்கட்டும் கட்டை அவிழ்ப்பது எப்படி!

ஜெயச.—இதோ அவிழ்த்து விடுகிறேன்! கொஞ்சம் நகருங்கள்! (தாமரைக் கண்ணன் நகருகிருன்) இருவரும் விழுகிரு் கள். விழுந்த பிறகு நீ எழுந்திரு நான் எழுந்திருக்கிறேன் என்று சொல்லுகிருர்களே தவிர எழுந்தபாடில்லை. இதற் குள் பரந்தாமன் எப்படியோ தன் கட்டை அவிழ்த்துக் கொண்டு வந்து இவர்களை அவிழ்த்து விடுகிருன்.

பரந்.—எல்லாத்தையும் நானும் பார்த்திண்டுதானுங்க இருந்தேன் என்னையும் கையையும் காலையும் கட்டிவிட்டாங்க. அந்த சமயம் எழுந்திருக்கவே முடியல்லே எப்படியோ அவிழ்த்து கிட்டு வந்து உங்களை அவிழ்த்தேன்.

தா. க.—ஆம! ஆம! உம் பெருமையைச்சொல்ல வந்தூட்டையாக் கம்! வெளிய சொன்ன ஊர் சிரிக்கம் சும்மாயிறு (மூவறு மாகச்சென்று ரமணனை அவிழ்கிருர்கள் ரமணன் அழுதுக் கொண்டே எழுந்திருக்கிருன் இதற்குள் அனந்தனும் வருகிருன்.)

ஜெயச.—(அனந்தனைப்பார்த்து) டேய்! தரித்திரம் எங்கேடா போய் இருந்தே!

அனந்.—போடா! அஷ்ட தரித்திரம்! அவன் குத்தின ஒரு குத்திலே எம்மண்டையிலே இருந்த ரத்தம் மொத்தம் வெளியே வந்தூடுது. தப்பிச்சிகிட்டாபோரும்னு ஓடிப் போய் மதில் செவுத்துக்குப் பக்கத்தில் ஒளித்துக்கொண் டேன். அவங்க மூணுபேரும் போனது தெரிந்ததுவந்தேன்.

தா. க.—ராஸ்கேல்! இவன் ஏதோ உள்ளுக்குள்ள வேலே செய்யிராய்யா!

அனந்.—ஐயையோ எனக்கு ஒரு பாவமும் தெரியாதுங்களே!!

ஜெய.—(தாமரைக் கண்ணன் பக்கம் கண்ணடித்துவிட்டு சரி சரி வாங்க போகலாம்.) (எல்லோரும் போகிறார்கள்.)

அனந்.—(எல்லோருக்கும் பின்னால் மூக்கை ஆட்டிக்கொண்டு) "தலே தப்பியது தம்பிரான் புண்ணியம்." யாவரும் போய்விடுகின்றனர்.

## காட்சி 8

நேரம்—இரவு 10–மணி

இடம்—தாமரைக்கண்ணன் வீடு

ஜெயச.—குப்புசாமி வீட்டுக்கு யார் யார் போவது.

பரந்.—வசவசண்ணு போகக்கூடாதுப்பா.

அனந்.—ஆமாம்பா! இரண்டுபேர் இல்லெண்ணு மூன்று பேர்!!

தா. க.—அப்போ........ஜெயசங்கரும் அநந்தனும் என்னோடு வரட்டும்!! (குள்ளன்வந்து)

கு.—சாமி! கும்பிடறனுங்க. என்னமோ வரச்சொன்னீங்களாமே!!

தா. க.—நல்லதருணத்தில் வந்தாய். நீ சென்று எப்படியாவது வடவண்டதெல்லட பேதார் மகன் வீரசிம்மன் இருக்கானே! அவனை நாளை உதயத்திற்குள் இங்கு கொண்டு வந்து வடவேண்டும். இல்லேயேல் பைசல்செய்து விட்டாலும் சரிதான். என்ன?

கு.—செய்ங்கசாமி! உங்கள் உத்திரவுப்படி செய்கிறேன். நான் வரட்டுமா!

தா. க.—இந்தா இதை எடுத்துக்கொண்டுபோ! ஓர்பணப்பையை தூக்கிக்கொடுக்கிறான்)

குள்.—(அதைப்பெற்றுக்கொண்டு) ஏழைக்கு இதெல்லாம் எதுக்குங்க!! நான் வரட்டுமா! நாழி ஆச்சி.

தா. க.—செய்! போயிட்டுவா!! (போகும் போது) ஜாக்கிரதை!

குள்.—சரிதானுங்க! (போய்விடுகிறான்.)

ஜெ. ச.—நமக்கும் நாழி ஆகுது! போகலாம் வாருங்கள்! (யாவரும் போய் விடுகின்றனர்)

## பாகம். 9.

இடம் கிளார்க்கு குப்புசாமியின் வீடு

தாமரைகண்ணன், ஜெயசங்கர், ரமணி

ஜெ. ச.—குப்புசாமி எங்கே போயிருக்காருங்கோ

ரமணி.—ஜமீன்தாரய்யர் எங்கேயோ போக அனுப்பியதாயும் போய் இரண்டு நாளிலே திரும்பி விடுவதாயும் கடிதம் எழுதி கொடுத்தனுப்பினர். அவ்வளவுதானுங்க எனக்கு தெரியும்.

தா. க.—அடடே! கோட்டா வாங்கிட்டுவர அனுப்பினேமே! ஞாபகமே இல்லேய்யா! சரி வாங்க போகலாம்.

ரமணி.—எங்கே! இன்னேரத்திலே வந்தீங்க! உடனே போகணுங்கறீங்களே!!

அ. தன்.—இகி இகி!! ஒண்ணுமில்லேங்க! பக்கத்து ஊருக்கு போயிருந்தோம். கார் கெட்டுபோச்சி! கால் நடையாவரத்துக்கு இங்க வரத்துக்கே இவ்வளவு நேரம் ஆச்சி!! இன்னும் ஒருமைல் போகணம்ணு மணி 11, 11½ ஆயிடும். கிளார்க்கு குப்புசாமி வீடுஎங்கே காட்டு! தங்கீட்டு வெடிகாலீலபோயிடலாண்ணு ஐயா சொன்னறு. சரிதாண்ணு இங்கே இட்டு கிட்டு வந்தே.

ஜெ. ச.—ஆமாங்க! ஆமாங்க!!

தா. க.—என்னப்பா இது! மிஸ்டர் குப்புசாமி எப்போ இல்லேயோ இங்கே தங்காது சரியில்லேப்பா.

ரம.—பாதகமில்லீங்க! நீங்க இரவு இங்கேயே தங்கிட்டு பொழுது வெடிந்த பிறகு போகலாம். இதோ டிபன் செய்யறேன் சாப்பிடுங்க.

அனந்.—ஊஉ!! அதல்லா வாணுங்க!!

ஜெயச.—ஆமாங்க! நாங்க இப்பதா ஓட்டலிலே சாப்பிட்டுட்டு வந்தோம்.

ரமணி.—சரி! பாலாவது சாப்பிடுங்களே.

ஜெயச.—எங்களுக்கு வாணுங்க! ஐயாவுக்கு மட்டும் கொடுங்க.

ரமணி.—(தாமரைகண்ணனே பார்த்து) கொண்டு வரட்டுமா!

தா. க.—கொஞ்சம் பொருத்து சாப்பிடரேன்.

அனந்.—என்னங்க, ஐயாவுக்கு கொஞ்சம் படுக்க வசதியா இருக்கனும்.

ரமணி.—அதைபத்தி என்ன! நம்ப பெட்லே படுத்துகிட்டமே!!

ஜெயச.—நாங்கள் இருவரும் சென்று தெருபக்கம் அரையில் படுத்துக் கொள்ளுகிறோம். நீங்கள் சென்று பெட்டில் படுத்துக் கொள்ளுங்க.

அனந்.—இகி இகி! ஆமாங்க வரங்க (இருவரும் தெரு அறையில் படுக்க சென்றுவிடுகிறார்கள். பிறகு

ரமணி.—வாருங்க! பெட்ரூம் காட்ர! படுத்துக்கொள்ளலாம்.

தா. க.—(சிறித்துக் கொண்டே) இதோ வந்துட்ட (பின்னல் போகிறுன்.)

## காட்சி 10.

(படுக்கை அறைக்குள் ரமணி முன்னால் நுழைகிறாள் தாமரை கண்ணன் பின்னால் வருகிறான்)

தா. க.—இப்போ நீ மட்டும்தான் இருக்கையா! இன்னும் யாருவது.................

ரமணி.—ஒரு கிழவி இருக்கு.

தா. க.—அது யாரு?

ரமணி.—உங்க கிளார்க் இருக்காரே! அவருக்கு தாயார். எனக்கு சாட்சாத் பாட்டி.

தா. க.—நான் இங்கே படுத்துகிறத்துக்கு அவங்க ஏதாவது......... சந்தேகமா.........

ரமணி.—ம்மூ! அந்த கிழவிக்கு காதுங்கேக்காது கண்ணுங் தெரியாது. உட்கார்ந்த இடத்தவிட்டு எழிந்திருக்காது (ஆத்திரத்துடன்) அப்படிதான் சந்தேகப்பட்டால் உங்களோட என்னையும் அனுப்பிவிடட்டுமே உங்களாலே என்ன வைத்துக்கொண்டு காப்பாத்த.........

தா. க.—(சிரித்துக்கொண்டே) அதைப்பற்றி சொல்லவில்லை (அவள் கரங்களை பிடித்துக்கொண்டு) உனக்கு என்மீது......

ரமணி.—அளவிலா காதல் உண்டு (அவன் கைகளை பிடித்து தன் ஸ்தனத்தின்மேல் வைத்துக்கொண்டு) சந்தர்ப்பம் வாய்க்குமா என்றுதான் எதிர்பார்த்துக் கொண்டிருந்தேன்.

தா. க.—(ரமணியின் தோள்களை பிடித்து பெட்டின்மேல் உட்கார வைத்துக்கொண்டு) நானும் உன்னை அநேக தடவை பார்த்திருக்கிறேன். பார்க்கும் போதெல்லாம் உன்னை தனிமையில் சந்திக்கும் நாள் என்னாளோ என்று ஏங்கி இருந்தேன்.

ரமணி.—அகாலமாகிறது. பாலை சாப்பிடுங்கள் (தாமரைக்கண்ணன் அவள் மார்பின்மீது சாய்ந்துக்கொண்டு சாப்பிடுகிறான் முடிந்ததும்)

தா. க.—உனக்கு குப்புசாமியை பிடிக்கலையா?

ரமணி.—அந்த வயித்தெரிச்சலை என் கேட்கரீங்க. அந்த பயித்தியத்தின் குடுமி அழகும், முக அழகும், நடை அழகும்

தா. க.—அதென்ன அப்படி சொல்ர! அவன்மட்டும் என்ன? நன்ருகத்தான் இருக்கிறான்!

ரமணி.—ஆமா ஆமா! நீங்கதான் மெச்சிகிணம் உங்க குமஸ்தாவை உடம்பிலே பலம் உண்டா? கையிலேதா பணம் உண்டா? என்னமோ என்ன கொண்டுவந்து தலைச்சாங்க.

தா. க.—கண்ணே! கவலைபடாதே!! உன் கவலையை தீர்க்கவே நான் இங்கு வந்தேன். இந்தா இதை ஜாக்கிறதையாக வைத்துக் கொள் (ஓர் பணப்பையை எடுத்து கொடுக்கிறான்.)

ரமணி.—என்ன பணமா? எனக்கெதற்கு. உங்கள் அன்பு இருந் தால் அதுவே போதும்.

தா. க.—என்னிடத்தில் பணம் குணம் இரண்டும் உண்டு. இனி இந்த ஜமீனுக்கே சொந்தக்காரி நீதான். ஆனால் உன் அன்பு மட்டும் மாரக்கூடாது.

ரமணி.—(பணப்பையை தலையணையின்கீழ் வைத்துவிட்டு) நாழிகை ஆகிவிட்டது படுத்துக்கொள்ளுங்கள். (ரமணி முதலில் படுக்கிறாள் அவள் பக்கத்தில் தாமரைகண்ணான் படுக் கிறான்.)

## காட்சி 11

இடம்—தாணிபதியின் வீட்டு மாடியில் படுக்கை அறை—நேரம் இரவு ஒரு மணி. தாமரைக்கண்ணானின் ஆட்கள் வீரசிம்மனை கொலை செய்ய வருகிறார்கள்.

வீரசிம்மன் தாணிபதி இருவரும் அயர்ந்த நித்திரையில் இருக்கிறார்கள் அப்பொழுது குள்ளன், குண்டன், வீரமுத்து மூவரும் வருகிறார்கள். (தோட்டத்தின் பின்புரத்தில் மூவரும்)

குள்ளன்.—ஏண்டா உங்களிலே யாராவது இந்தவீட்டுக்கு இதுக்கு முன்னே வந்திருக்கீங்களாடா?

குண்டன்.—நான் எம்பா இந்த ஊட்டுக்கு வரப்போரேன்?

வீரமுத்து.—கார் செட்டு (Shed) கட்ரபோது நான் ஒரு தடவை வந்திருக்கேன்!

குள்ளன்.—கார் ஷெட்டா! அது எங்கடா?

வீரமுத்து.—அந்தாண்ட இருக்கு.

குள்ளன்.—சரி,வா! அந்த பக்கம் போகலாம். (ஒருவன் பின் ஒருவனாக அடிமேல் அடிவைத்துக்கொண்டு கார் ஷெட் இருக் கும் பக்கம் வருகிறார்கள்.)

வீரமுத்து.—இதுதான் அண்ணே! கார் ஷெட்டு.

குள்ளன்.—சரி! நீங்க இரண்டு பேரும் இங்கேயே இருங்கோ. இதுமேலே ஏறி மெத்தைக்கு போக வழி இருக்கா இன் ணொன்னு பாத்துகிட்டு வரேன். (வீரமுத்தும் குண்டனும் தங்கி விடுகிறார்கள்—குள்ளன் சென்று ஷெட்டை சுத்தி பார்த்துவிட்டு புதிதாக ஒன்றைக் கண்டவன்போல் அங் கிருந்து குதித்துக்கொண்டு வருகிறான்.)

குள்ளன்.—வீரமுத்து! நீ பலே கேட்டிக்காரண்டா! ஜோரான வழியை காண்பித்துவிட்டையே. இண்ணைக்கு வீரசிம்மனை புளிமூட்டை மாதிரியாக கட்டி தூக்கி கிட்டு போயிடலாம். வாங்கடா என் பின்னாலே (வீரமுத்துவும் குண்டனும் குள்ளனுக்கு பின்னால் போகிறார்கள். ஷெட்டுக்கு வெளியில் ஓர் கார் நின்றுக்கொண்டிருக்கிறது. கார் டாப்பின் மேல் ஏறினால் பின்பு சுலுவாக கார் ஷெட்டின் டாப்பின் மேல் ஏறலாம். கார் ஷெட்டின் மேல் ஏறிவிட்டால் பின்பு மெத்தையின் மேல் ஏறுவதற்குச்சொல்ல வேண்டியதே இல்லே. இதை அறிந்த குள்ளன், வழியை அவர்களுக்கு கையால் காட்டி)

குள்ளன்.—தேடப்போன மூலிகை காலில் அகப்பட்டமாதிரிதான். டேய் வீரமுத்து! நீ இந்த காருக்குள் ஒளிந்துக்கொண்டு யாராவது வராங்களா இன்னுண்ணு பாரு நாங்க இரண்டு பேறும் மெத்தமேலே போய்வரோம்.

வீரமுத்து.—நீங்க இரண்டுபேறும் ஒரு ஆளை தூக்கிட்டுவருவீங்களா?

குள்ளன்.—தூக்கி வருவதாவது வம்பாவது (கையில் இருந்த கத்தியை எடுத்துகாட்டி) பாத்தியா ஆள அப்படியே தெரிஞ்ஜிகினையா, வரோம்

வீரமுத்து.—அப்போ என்ன தனியாவா இருக்கசொல்ரீங்க

குண்டன்.—பச்ச குழந்தையாச்சே தனியா இன்னுடா! எல்லா இருடா வரோம்! (குள்ளனும் குண்டனும் போகிறார்கள் வீரமுத்து காரில் டிரைவர் உட்காருமிடத்தில் உட்கார்ந்துக்கொள்ளுகிறான் ஏறியவர்கள் ஒருவர்பின் ஒருவராக கார் ஷெட்டின்மீது ஏறி அங்கிருந்து மெத்தையின் மேலும் ஏறிவிட்டார்கள். வீரமுத்து அதற்கு முன் காரின் மீது உட்கார்ந்தவன் அல்ல. புதிதாக உட்காரவே ஒவ்வொரு பாகத்தையும் கூர்மையாக கவனித்து வந்தான். கண்ணாடி ஒன்று தெரிந்தது நிலவுவெளிச்சத்தில் இவன்உருவம் அதில் மங்கலாக தெரிந்தது. அதன் அருகில் தன்முகத்தை வைத்துக்கொண்டு தலையை மோவாக்கட்டையை எல்லாம் தடவி அழகு பார்த்தான். கண்ணாடிக்கு மேல் தகரத்தால் செய்யப்பட்ட குழாய் போல் ஒன்று வளைந்து இருந்தது. அதன் நுணியில் ரப்பர் பந்து போல் இருந்தது. அதை அமுக்கினான். "ப்போய், ப்போய்" என்றது. இவன் பாடு தூக்கிவாரிபோட்டது. மேலே சென்றவர்கள் பயந்து கீழே பார்த்தார்கள். அவர்கள் செய்த சைகை வீரமுத்துவை "என்னடா அது!" என்று கேள்வி கேட்பதுபோலிருந்தது. உடனடியாக முத்துவும் ஒன்றுமில்லே யென சைகை மொழியிலேயே பதிலளித்தான். பிறகு இருவரும்

மாடிக்குள் நுழைய ஆரம்பித்தார்கள். மாடியின் வெளியில் நிலவுவெளிச்சத்தில் படுத்துக்கொண்டிருந்த தரணிபதி திடுக்கிட்டு எழுந்தான். விரைந்து சென்று கேட்டண்டை பார்த்தான். கார் எதுவும் வருவதாகத் தெரியவில்லை. உடனே கார் ஷெட் பக்கம் திரும்பிப் பார்த்தான். அங்கு ஒருவன் நின்றுக்கொண்டு மாடியை நோக்கி கையை ஆட்டுவதை பார்த்தான். அவன் கையை ஆட்டும் பக்கம் மாடியில் பார்த்தான். இரண்டு முரட்டு பேர்வழிகள் அவன்கையைஆட்டியதின் அர்த்தத்தைதெரிந்துக்கொண்டு மாடிக்குள் பதுங்கி, பதுங்கி வருவதைப்பார்த்தான். அர்த்தம் என்னவென்று தெரியவில்லை. அவர்கள் எந்த பக்கம் போகிறார்கள் என்று பார்த்தான். இவன் இருக்கும் பக்கமே வந்தார்கள். உடனே மாடியில் இருந்த ரூமுக்குள் நுழைந்துக்கொண்டு இவர்கள் எப்படி போகிறார்கள் என்று பார்த்தான். வந்தவர்கள் நேராக இவன்படுத்திருந்த படுக்கை பக்கம் வந்தார்கள். ஒருவன் படுக்கையின் அருகில் சென்று பார்த்தான். ஒருவரும் இல்லை என்று மற்றொருவனிடம் சைகை காட்டினான். பிறகு இருவரும் தரணிபதி இருந்த அரையின் கதவை அமுக்கினார்கள்.

குண்டன்.—இந்த வெய்ய காலத்தில் கதவை சாத்திகிட்டுகூட தூங்குவாங்களாப்பா!

குள்ளன்.—ஆமாம்பா! வா, அந்த ரூம்லே போயி பார்க்கலாம் (இருவரும் அடுத்த அறைக்கு போனார்கள். போனதும் குசு குசு என்று பேச்சுகேட்டது).

தரணிபதி.—(தனக்குத்தானே) இவனுங்க இரண்டு பேரும் திருடனாக இருந்தால் படுத்துகிட்டு இருக்கவங்களை ஏன் தேடப் போறாங்கோ! இருக்காது. ஒருவேளை தாமரை கண்ணனாலே "ம்மூ" இருக்கும்! இருக்கும்!!
(கதவை திறந்துக்கொண்டு வெளியே வந்து பதுங்கிக் கொண்டே திருடர்கள் சென்ற வழியேபோய் அவர்கள் போன அறையை எட்டி பார்க்கிறான். இவன் பாடு தூக்கி வாரிபோட்டது. கத்தி வீரசிம்மனின் கழுத்தில் விழும் சமயம் ஒரேபாய்ச்சலாக பாய்ந்தான் குள்ளன்மீது திடீர் என்று ஒருவன் தன்மீது வந்துவிழவே குள்ளன் இருதய அதிர்ச்சியால் கையில் இருந்த கத்தியை நழுவவிட்டு வீரசிம்மன் பேரில் விழுந்தான். அயர்ந்த நித்திரையில் இருந்த வீரசிம்மன் திடுக்கிட்டு எழுந்தான். ஜன்னலின் வழியாக வந்துக்கொண்டிருந்த நிலவு வெளிச்சத்தின் உதவியால் அங்கு நடந்தவையாவும் அவனுக்கு உடனே புரிந்துவிட்டது. ஒரு புரத்தில் தரணிபதியும் குள்ளனும் ஒருவரை ஒருவர் தள்ளிக்கொண்டும் குத்திக்கொண்டும்

இருந்தார்கள். மற்றொரு புரத்தில் அதாவது, இவன் படுக்கையின் கீழ் விழுந்திருந்த கத்தியை எடுக்க குண்டன் ஓடி வந்தான் அதைக்கண்ட வீரசிம்மன் குண்டன் படுக்கையின் கீழ் குனிந்து கத்தியை எடுக்கப்போகும் சமயத்தில் குண்டனின் மோவாகட்டையை பார்த்து ஓர் உதை விட்டான். அவன் கொஞ்சம் முகத்தை தூக்கவே அது அவன் கழுத்தில் விழுந்தது. குண்டன் சற்று திகைத்து நின்றான். இதற்குள் வீரசிம்மன் படுக்கையை விட்டிறங்கிவிட்டான் குண்டனுக்கும் வீரசிம்மனுக்கும் கை கலந்தது. இதற்குள் குள்ளன் எப்படியோ தாணிபதியிடம் இருந்து தப்பி கத்தியை எடுத்துக்கொண்டான். அதோடு நில்லாமல் தாணிபதியை கத்தியால் குத்தவும் ஆரம்பித்து விட்டான். முதல் குத்து தரணிபதியின் கழுத்துக்கு நேராக வந்தது. அதைக்கண்ட தரணிபதி அவன் வெட்டும் நேரத்தில் சட்டென்று உட்கார்ந்து மறுபக்கம் போய்விட்டான் மறு குத்து மார்புக்குச்சரியாக வந்தது. குத்தவந்த கையைப் பலமாகப்பிடித்துக்கொண்டு குள்ளனின் முகத்தின் மேல் ஓர் குத்து குத்தினான். மூன்றாம் குத்து அடிவயிற்றுக்குச் சரியாக வந்தது. உடனே தாணிபதி குப்புற தரையில் படுத்தான். குத்தின வேகத்தைத்தாங்குவதற்கு ஏதுவில்லாமல் போகவே குள்ளன் எருமைக்கடா போல் தாழே விழுந்தான். உடனே தாணிபதி பெட்டின் மீது ஏறினான் விழுந்த குள்ளன் எழுந்து வருவதைக்கண்டு அவன் மீது தலையணையை எடுத்து வீசினான். தற்செயலாக தலையணையின் கீழ் இருந்ததைக்கண்ட தாணிபதிக்கு அளவிலா ஆனந்தம் உண்டாயிற்று உடனே அதைக்கையில் எடுத்தான் அதைக்கண்ட குள்ளனுக்கு கை கால்களெல்லாம் உதற ஆரம்பித்தது.

த. பதி.—(குள்ளனை நோக்கி) ம்ழு!! தூக்கு கையை! (குள்ளன் பேசாமல் கையை தூக்கி விட்டான். குண்டன் இதை கண்டதும் எப்படியோ வீரசிம்மனை உதறிக்கொண்டு ஓடியே போய் விட்டான்.)

வீர. மன்.—(குள்ளனை பார்த்து கோபக்குறியுடன்) டேய் யார் நீ?

குள்ளன்.—பேசாமல் நிற்கிறான்.

த. பதி.—கத்தியை தாழே போடு! (சற்று பொறுத்து) போடுகின்றாயா சுட்டு விடட்டுமா !!

குள்ளன்.—கத்தியை தாழே போடுகிறான்.

வீர. மன்.— (கத்தியை எடுத்துக்கொண்டு) உண்மையை கூறுகின்றாய இல்லையா ?

குள்ளன்.—எனக்கு ஒன்றும் தெரியாதுங்கோ. இப்ப ஓடினானே அவன் தானுங்கோ என்ன இட்டுகிட்டு வந்தான்.

வீர. மன்.—எதற்காக இட்டுக்கொண்டு வந்தான்?

குள்ளன்.—வீரசிம்மன் என்று ஒருவன் இருக்கிறன். அவனைக் கொலை செய்ய வேண்டும் என்று ஜமீன்தார் சொன்னர். நீயும்வரணும்என்று சொன்னுங்க. நான்வரமுடியாதுண்ணு அப்பவே சொன்னனுங்கோ. வராம போயிட்டா ஜமீன் தாரய்யா கிட்ட சொல்லி உன்னை ஊரை விட்டு ஓட்டி விடு வேண்ணு சொன்னுனுங்கோ. அதுக்குப்பயந்து கிட்டு வந்தனுங்கோ.

தர. பதி.—அந்த ஜமீன்தார் ஐயா யாரு?

குள்ளன்.—எந்த ஜமீன் தார் ஐயாங்க?

தர. பதி.—இப்பொ சொன்னுயே! உன்னை ஊரை விட்டு தெரித்தி விடுவாருண்ணு அவுரு.

குள்ளன்.—எனக்குத்தெரியாதுங்களே!

வீர. மன்.—(கத்தியை காண்பித்து) சொல்கிருயா அல்லது இதற்கு இறை யாக்கட்டுமா ?

குள்ளன்.—(விழித்துக்கொண்டு) தாமரைக் கண்ணனுங்க!

தர. பதி.—நான் அப்பவே நினைத்தேன். அந்த படவாப்பயலாகத் தான் இருக்கனும் என்று.

வீர. மன்.—சரி இதைப்போல துஷ்டத்தனத்துக்கெல்லாம் பணத்துக்கு ஆசைபட்டுக்கொண்டு வராதே போ.

தர. பதி.—அடடே! அது சரி யல்லெண்ணே! வாப்பாபோரே (குள்ளன் தயங்கினன்) டேய் வாட போரேண்ணு!

குள்ளன்.—வரனுங்க சாமி (வருகிருன்)

தர. பதி.-"உன்னைப்புதைக்க நீயேபள்ளம்வெட்டிக்கொள்ளாதே" (என்று ஓர் காகிதத்தில் எழுதி குள்ளனின்முதுகில் ஒட்டி) இதை "ஜமீன்தாரிடம் காண்பி" என்று சொல்லி அனுப்பி விடுகிருன். (குள்ளன் போன பிறகு)

வீர. மன்.—பெரிய அட்டூழியக்காரனுக இருக்கின்றுனே! அவனை என் செய்வது?

தர. பதி.—செய்வது என்ன! தானுகத்திருந்தி விடுகிருன். மணி 2 தான் ஆகுது நான் போய் தாழபடுத்துக்கொள்ளப் போகிறேன். வரயா ! இல்லையா!!

வீர. மன்.—வருகிறேன். (இருவரும் போய் விடுகிருர்கள்)

## காட்சி. 12.

இடம் தாமரை கண்ணன் வீடு

தாமரைக் கண்ணன், ஜெயசங்கர், குள்ளன்,

தாமரைக்கண்ணனும் ஜெயசங்கரும் வராண்டாவில் அமர்ந்துக்கொண்டிருக்கின்றனர் குள்ளன் வருகிருன்.

ஜெ. ச.–(வரும் குள்ளனைப் பார்த்து) இதோ வருகிறானே குள்ளன்.

தா. க.–குள்ளன் பலே குள்ளன் அல்லே! வெற்றியுடன்தான் திரும்புவான். (குள்ளன் அருகில் வந்து தலையை குனிந்துக் கொண்டு நிற்கிறான்)

தா. க.–(பரபரப்புடன்) போன காரியம் என்ன வாயிற்று.

குள்ளன்.– நான் தப்பியது அரிதாப்போச்சிங்கொ.

தா .க.–என்ன! நீ தப்பியதே அரிதாப்போச்சா!!

ஜெ. ச.–முதுகில் என்ன காகிதம்.

குள்ளன்.–(பயந்துக்கொண்டு) அவங்க எழுதிஒட்டினது தானுங்க!

தா. க.–எதோ! திரும்பு (படித்துப் பார்த்துவிட்டு புருவத்தை நெருக்கிப்பிடித்து மேலே தூக்கிக்கொண்டு கோபக்குறியுடன்) என்ன? உன்னைப்புதைக்க நீயே பள்ளம்வெட்டிக் கொள்ளாதே'' என்ன மமதை! அந்த பிச்சைக்காரப்பயல் களுக்கு; மிஸ்டர் ஜெயசங்கர், இன்று நாமே சென்று பார்க்கலாம். மணி 8–க்செல்லாம் நீங்கள் வரவேண்டும். என்ன?

ஜெ. ச.– அவசரப்படாதிங்க பொருத்து பார்க்கலாம்.

தா. க.–பொருப்பது என்ன, இன்றிரவு கிளம்பித்தான் ஆக வேண்டும், எனக்குப்பக்கத்து ஊரில் கொஞ்சம் காரியம் இருக்கிறது : வாருங்கள் போகலாம். (குள்ளனைப் பார்த்து) டேய், மணி எட்டுக்கெல்லாம் வரவேணும். தெரியுமா?

குள்ளன்.–சரிதானுங்க –(யாவரும் போய் விடுகிறார்கள்.)

## காட்சி. 13.

நடைபாதை

கமலக்கண்ணன்.–மிஸ்டர் காத்திகேயன், என்னய்யா இது அக்றும்பா இருக்கு!!

கார்த்திகேயன்.–என்ன! சமாச்சாரம் சொல்லாமலே அக்குரும் பூண்ணு!!

கமல. க.–நம்மே–வேலையை விட்டு டிஸ்மிஸ் பண்ணிட்டாங்க!

காத்திகேயன்.–ஏன்?

கமல. க.–அதை பத்திக்கேக்கரவங்க யாரு! இது பணக்கார கவர்மெண்ட் தெரியுமேல்லேயோ;

கார்த்திகேயன்–இப்போ பதிலுக்கு யாரு?

கமல. க.– அடகன்றுவியே! இவ்வளவு தானா நீ? நம்போ ஜமீன்லே வேலே மட்டும் தெரிந்திருந்தால் போதாது. நம்போ ஆபீசுக்கு மானேஜராவரணம்ணு, நம்ப வீட்டுக்கு ஜமீன் தாரய்யா மானேஜரா போயிடணும்.

கார்த்தி. கே.—என்னய்யா நீ சொல்ரத்து ஒண்ணும் புரியலே?

கமல. க.—அதல்லாம் போகப் போக புரிஜ்ஜிக்கு வீங்க!

கார்த்தி. கே.—இப்போ யார்தான் மானேஜர்?

கமல. க.—குப்புஸ்வாமி (வெருப்புடன்) வந்து ஆறுமாசம் ஆகல! மானேஜர்! மானேஜர் !!

கார்த்தி. கே.—கோவிச்சிகிறதுலே! இன்னுப்பா இருக்கு. அதல்லாம் அதஷ்டம் இருக்கணம்.

கமல. க.—மிஸ்டர் உங்களுக்கு இன்னம் களியாண ஆகலே! ஆனு அதஷ்டம் தானு வரும்.

கார்த்தி. கே.—இதோ வராரே குப்புஸ்வாமி(குப்புஸ்வாமி சிரித்துக் கொண்டே வருகிருன்)

கமல. க.—வாருங்கள் மானேஜர் வாள் வணக்கம்.

குப்புஸ்வாமி.—(அருவருப்பான முகத்துடன்) நமஸ்தே

கமல. க.—(குப்புசாமியை பார்த்து) உமது மனைவி—ஜமீன்தார்—எல்லாம் சவுக்கியம், தானே

குப்புஸ்வாமி.—(கோபக்குறியுடன்) சவுக்கியம் தான்,

கமல. க. அவர்களுக்கு குழந்தை ஏதாவது —...............

குப்புஸ்வாமி (கோபக்குறியுடன் உறத்தகுரலில்) என்னையா விளையாடரே போல இருக்கு, ஜமீன்தாரிடம் சொல்லி ஊரை விட்டு விரட்டி விடுவேன் ஜாக்கிரதை.

கமல. க.—என் என் மனைவியை அர்ப்பணம் செய்யாததினுலோ?

குப்புஸ்வாமி.—(ஆத்திரத்துடன்)என்னடா சொன்னே? இதனுலே தான் கடவுள் உங்களை எல்லாம் இதைப்போல் வைத்திருக்கார். அபாண்டப்பழி சுமத்துகின்றனையே. எப்படி இருந்தாலும் நீ சூத்திரப்பயல் தானேடா.

கமல. க.—மானேஜர் பதவி வந்திடுதுண்ணு பார்த்துக்கொண்டையோ உதைக்கிறேன் பார் பிளேகட் (அடிக்க ஓடுகிருன்) கார்த்திகேயன் அவனை பிடித்துக்கொள்ளுகிருன்.

குப்புஸ்வாமி.—(நடந்துக்கொண்டே) நான் உன்னை யின்னும் நாலு நாள்ளே ஒரு கை பாகலேண்ணு நான் என் பூணூலை அறுத்து போட்டு விடுகிறேன் பார்த்துக்கொள். (போய் விடுகிருன்)

கார்த்திகே-(இதைஎல்லாம் பார்த்துவிட்டு)இப்போதான் புரிஞ்சுது போருன் தாழி வாப்பா போவோம். (போய் விடுகின்றனர்)

## காட்சி. 14.

### குப்புஸ்வாமியின் வீடு.

குப்புஸ்வாமி.—எண்டி ரமணி எங்க இருக்கே இங்கவா போரே.

ரமணி.—(வந்துக்கொண்டே) என் இப்படி கத்தரேள் ஏதோ அதிசயத்தை கொண்டுவந்தவர் போலே

குப்புஸ்வாமி.-ஆமாண்டி ஆமா, நம்ப அதிசயம்தான் ஊர் சிறிக்குதே.

ரமணி.-ஏன் சிறிக்குது?

குப்புஸ்வாமி.-அதை வாய் விட்டு சொல்லணமோ.

ரமணி-இதோ பாருங்கோ, ஊருலே யாரு எத்த சொன்னு, என்ன? நமக்கு வேண்டியது பணம். இல்லாமபோனு உம்ம மூஞ்சிக்கு மானேஜர் வேலே வந்தூடுமாக்கும் பக்கத்தாத்து பங்கஜம், அந்த வீட்டு கனகம், கோடிவீட்டு கோமளம் இவாளல்லாமட்டும் யோக்கியமாக்கும். அவ்வளவு எதுக்கு நம்போ சீதாபிராட்டி ராவணனேடுபோயிட்டாளே அவளே ராமபிரான் கூட்டிவந்து குடித்தனம் பண்ணவில்லேயாக்கும் கையிலே பணம் சேர்ந்தூட்டா இதல்லா தானு மரஞ்சிடும்.

குப்புஸ்வாமி.-இன்னேக்கு அந்த கமலகண்ணன் என்னே என்ன கேட்டான் தெரியுமா ?

ரமணி.-அதைப்பத்தி கவலே படாதீங்கோ இப்போ ஜமீன்தார் வர வேளே வரட்டும் நான் அவரிடம் சொல்லி கவனிக்க சொல்கிறேன் நீங்க எங்கையாவது போயி அப்ரமா வாங்கோ. அடுப்பிலே வாணுவை போட்டிட்டு வந்தூட்டேன். நான் வரேன் (ரமணி போய்விடுகிருள்-குப்புஸ்வாமி பெருமூச்சி விட்டுக்கொண்டு வெளியே போகிருன்.)

## காட்சி. 15.

இடம் தாணிபதியின் வீடு

சப். இனிஸ்பெக்டர். கான்ஸ்டேபிள்கள் மூவர் மற்றும்பலர் கமலக் கண்ணன் கொலேயை குறித்து விசாரிக்கிருர்கள். சபம் தலே வேறு கால்வேருய் கிடக்கிறது.

சப். இனிஸ்பெக்டர்.-(கமலக்கண்ணன் மனேவியை பார்த்து) உனக்கு யார் மீதம்மா சந்தேகமாக இருக்கிறது?

கமலன் மனேவி.-நான் யாரை பழிகூறுவது.

சப். இனிஸ்.-உன் கணவருக்கு யாரிடமாவது பகையுண்டா ?

கமல. மனேவி.-ஜமீன்தார் தாமரைகண்ணன் ஒருவரை தவிர வேறு எவரிடமும் அவருக்கு பகைமை கிடையாது.

கமல. தகப்பனர் :-(அழுகையும் கோபமும் கலந்த குரலில்) இந்த படுபாவியைதான் கேளுங்கள். என் மகனே கொன்றது யார் என்று எனக்கு நன்ருக தெரியும்.

சப். இனிஸ்.-சற்று பொரும்—உம்மைக் கேட்கும்போது நீர் பதில் கூறலாம் (கமலக்கண்ணன் மனேவியை பார்த்து) ஏனம்மா ஜமீன்தாருக்கும் உங்கள் கணவருக்கும் விரோதம் ஏற்பட்ட காரணம்.........?

கமல. மனைவி :-காரணம் எனக்கு சரிவர தெரியாது. ஜமீன்தார் இவரை, உனக்கும் எனக்கும் சரிபடாது நீ என்னையே எதிர்க்க ஆரம்பித்துவிட்டாய். நாளை முதல் வேலைக்கு வர வேண்டியது இல்லை என்று சொன்னாராம் இவைகள்தான் எனக்கு தெரியும்.

சப். இனிஸ் :-அதற்குப்பிறகு ஒன்றும் நடக்கவில்லையா ?

கமல. மனைவி :-ஓர் நாள் ஓர் கடிதம் வந்தது.

சப் இனிஸ் :-என்ன கடிதம் ? அது எங்கிருந்து வந்தது ?

கமல. மனைவி :-எங்கிருந்து வந்தது என்பது எனக்குத்தெரியாது. கடிதம் மட்டும் என்னிடம் இருக்கிறது.

சப். இனிஸ் :-எதோ அதை கொண்டுவாருங்கள் !

கமல. மனைவி :-(உள்ளே சென்று ஓர் கடிதத்தைக் கொண்டுவந்து கொடுத்து) இந்தக்கடிதம் தான்.

சப் இனிஸ் :-(கடிதத்தைப்படித்து பார்க்கிறார் அதில்) "உன் ஆவி உடலைவிட்டு நீங்கும் நாள் கிட்டிவிட்டது ஜாக்கிரதை—இப்படிக்கு—குள்ளன்" (என்று எழுதியிருந்தது அதை எட் கான்ஸ்டேபில் இடம் கொடுத்து ஜாக்கிறதையாக வைத்துக்கொள்ளும்படிச் சொல்லிவிட்டு கமலன் மனைவியைப்பார்த்து) இது வந்து எத்தனை நாள் ஆகி இருக்கும்.

கமல. மனைவி :-மூன்று நாட்களுக்குமேல் ஆகி இருக்கும்.

சப் இனிஸ் :-அப்படி சொல்லக்கூடாது ஒரே நாளைதான் குறிக்க வேண்டும்.

கமல. மனைவி :-சரிவர ஞாபகம் இல்லை. நான்கு நாள் நிட்சயமாக சொல்லலாம்.

சப் இனிஸ் :-சொல்லலாம் இல்லை—சொல்வேன் என்று சொல்லணும் !—ம்மு !! இதன் உரை எங்கே ?

கமல. மனைவி :-அதைக்காணவில்லை.

சப் இனிஸ்.-சரி, நீங்களும் உங்கள் கணவரும் இரவு எவ்வளவு நேரம் பேசிக்கொண்டிருந்திருப்பீர்கள்.

கமல. மனைவி :-பத்து மணிவரை.

சப் இனிஸ்.-கொலை நடந்த போது மணி என்ன?

கமல. மனைவி.-ஒரு மணி இருக்கும்.

சப் இனிஸ்.- அப்பொழுது நீங்கள் கண் விழித்துக்கொண்டுதான் இருந்தீர்களா?

கமல. மனைவி.-இல்லை தூங்கிக்கொண்டுதான் இருந்தேன்.

சப் இனிஸ்.- அப்பொழுது உங்களுக்கு மணி எப்படி தெரியும்?

கமல. மனைவி.-கத்திகுத்து என் கணவரின் கழுத்தில் பட்டதும் அவர் ஐயோ என்று, ஓர் சப்தம் போட்டார். நான் அலறி எழுந்தேன். கொலையாளிகளும் நான் எழுந்ததும் ........

அவ்விடத்தைவிட்டு ஓடிவிட்டார்கள் என்கணவர் உயிரும் நீங்கியது. அந்த அகோரக்காட்சியைக்கண்டதும் நான் கூச்சலிட்டேன். உடனே யாவரும் வந்தார்கள்.

சப் இனிஸ்.—என்ன வென்று கூச்சலிட்டீர்கள்?

கமல. மனைவி.—அவை எனக்கு ஞாபகம் இல்லை.

சப் இனிஸ்.—கொலையாளிகள் யார் என்பது உங்களுக்கு தெரியுமா?

கமல. மனைவி.—அவர்களை இதற்கு முன் பார்த்ததே கிடையாது.

சப் இனிஸ்.—இன்னும் ஏதாவது சொல்ல இருக்கிறதா?

கமல. மனைவி.—வேறு என்ன இருக்கிறது?

சப் இனிஸ்.—சரி (கமலக்கண்ணன் தகப்பனரை பார்த்து) நீங்கள் சொல்லப்போவது என்ன?

கமல. தகப்பனர்.—என்னை நச்சு நச்சுண்ணு கேக்காதிங்கோ. ஆமா, என்மனதில் உள்ளதை மடமடண்ணு சொல்லிவிடுகிறேன்.

சப் இனிஸ்.—சொல்லுங்கோ.

கமல. தகப்பனர்.—இவள் இதுவரை சொன்னது யாவும் பொய் என்மகனைக்கொன்றதுக்குக்காரணம் இவளே (கமலக்கண்ணன் மனைவியைத்தூக்கி வாரிப்போட்டது)

சப் இனிஸ்.—என்ன, மனைவியா கணவனைகொன்றதுக்கு காரணம்!

கமல. தகப்பனர்.—ஆம் இவளுக்கும் வீரசிம்மனுக்கும் ஸ்நேகம் உண்டு அதை முன்னிட்டு என்மகன் இவளைக்கண்டித்தும் இருக்கிறன் என்மகனல் சஞ்சலம் ஏற்படுவதால் அவனை ஒழித்து விட்டால் நல்லது என்று வீரசிம்மன் என்மகனை கொன்றுவிட்டான். என்மகன் இறந்தநாழிகையில் இருந்து வீரசிம்மனைக்காணவில்லை

சப் இனிஸ்.—வீரசிம்மன் யார்

கமல. தகப்பனர்.— அவனைப்பற்றி எனக்கு ஒன்றும் தெரியாது. அவனுடைய தோழன் தாணிபதிக்குத்தான் தெரியும்.

சப் இனிஸ்.—தாணிபதி எங்கே?

கமல. தகப்பனர்.—அவன் நேற்றையதினம் ஏதோ ஒரு ஊருக்குக் கலியாணத்துக்கு போனன். அவனேடு தான் வீரசிம்மன் இருக்கிறன். அவர்களின் வீடுதான் இது.

சப் இனிஸ்.—அப்பொழுது நீங்கள் இங்கே வாடகைக்கு இருக்கிறீர்கள் போல இருக்கு. மிஸ்டர் 228. பிணத்தை ஜட்காவிலே எத்திகிட்டு அந்த பொம்பளையையும் ஸ்டேஷனுக்கு அழச்சிகிட்டு வாங்கப்பா (கமலக்கண்ணன் தகப்பனரை பார்த்து) சாயங்காலத்துக்குமேல் வந்து பிணத்தை வாங்கிக் கொள்ளுங்கோ. நாங்கவரம். (சப் இனிஸ்பெக்டர் போகிறர் பின்னல் யாவரும் போகிறர்கள்)

# காட்சி. 16

இடம் ஜமீன்தார் ஜெயந்தன் வீடு

ஜெயந்தன்—குமஸ்தா ரங்கசாமி—சப் இனிஸ்பெக்டர்

ஜெ. தன்.—எம்பா பின்னலேயே வருகிறார் என்று சொன்னையே எங்கேப்பா இன்னும் காணும்!

கு. ரங்கசாமி.—வந்துடுவாருங்கொ நீங்க கவலைபடாதீங்கொ அந்த அம்மாவுக்கு எந்தவித ஆபத்தும் வருதுங்கொ அவங்களும் வருவாங்கொ.

ஜெ. தன்—நேற்றுமாலை 5 மணியில் இருந்து இதுவரைகாணும் இனிமேலா வரப்போகிறாள் !

(சப் இனிஸ்பெக்டர் வருகிறார்)

ஜெ. தன்.— (கண்ணில் நீர்ததும்ப) வாங்க சார் உட்காருங்கொ

சப். இனிஸ்.—என்ன சார் நீங்க அழுகிரது எனக்கு ஆச்சரியமா இருக்கே............

ஜெ. தன்.—ஆச்சர்யமல்ல, வியப்பு.

சப். இனிஸ்.-நடந்ததை சொல்லுங்கோ

ஜெ. தன்.-(அழுகையும் ஆத்திரமும் கலந்த குரலில்) என் தங்கையை நேற்றுமாலை 5 மணியில் இருந்து காணும்

சப். இனிஸ்.—எங்கு சென்றிருப்பார்கள் ?

ஜெ. தன்.—அதுதான் எனக்கும் தெரியவில்லை.

சப். இனிஸ்.—உங்கள் மனதில் உள்ளதை ஒளியாமல் சொல்லுங்கள்.

ஜெயந்தன்.—சொல்வதற்குத்தானே உங்களைக் கூப்பிட்டேன்.

சப். இனிஸ்.—வீட்டில் எதுவாகிலும் பகைமை உண்டா.

ஜெயந்தன்.—ஒன்றும் கிடையாது. அவள் மனதிற்கு குறுக்கிடுவோரே கிடையாது.

சப். இனிஸ்.—வேறு என்ன காரணம்?

ஜெயந்தன்.—வீரசிம்மன் என்னும் ஒருவருக்கும் அவளுக்கும் சிநேகம் உண்டு.

சப். இனிஸ்.—யார் வீரசிம்மனா ?

ஜெயந்தன்.—ஆம் !

சப். இனிஸ்.—அவன்தான் ஒருவரைக்கொலை செய்துவிட்டதாகவும் இரவில் இருந்து காணவில்லை என்றும் இன்றுதான் கேஸ் தாக்கல் செய்தேன்.

ஜெயந்தன்.—வீரசிம்மனா கொலை செய்தான்? அவன் அப்பேர்பட்ட ஆள் அல்லவே !

சப் இனிஸ்.—அப்பொழுது நான் சொல்வது பொய்யா ? ளொர்க் கமலக்கண்ணனை கொலை செய்ததாகத் தகவல் போருமா.

ஜெயந்தன்.—காரணம் !

சப் இனிஸ்.—கமலக்கண்ணன் மனைவிக்கும் இவனுக்கும் ஸ்னே கிதம் உண்டாம் ! அதைக் கமலக்கண்ணன் கண்டித்தா னும் ! அதுதான் காரணம் !

ஜெயந்தன்.—இது யாருடைய வாக்கு மூலம் ?

சப் இனிஸ்.—கமலக்கண்ணன் தகப்பனுர் வாக்கு மூலம்.

ஜெயந்தன்.—இருக்கவே இருக்காது இது முற்றும் பொய் இப் பொழுது வீரசிம்மன் எங்கு இருக்கிருன் ?

சப் இனிஸ்.—அது யாருக்கு தெரியும் ?

ஜெயந்தன்.—(அருகில் உள்ளவர்களை பார்த்து) நீங்கள் சென்று உங்களுடைய வேலைகளை பாருங்கள். (யாவரும் போய் விடுகிருர்கள். தனிமையில் சப் இனிஸ்பெக்டரிடம்) சார் (Sir) தரணிபதியைப் பார்த்தீர்களா ?

சப் இனிஸ்.—அவன் நேற்றியதினம் வெளியூர் போனுனும்.

ஜெயந்தன்.—சரி—நான் நினைத்தது சரியாய் விட்டது. நீங்கள் வீரசிம்மனையும் என் தங்கையையும் பார்த்தால் அவர்களை பங்கப்படுத்தாமல் என்னிடம் சேர்க்க வேண்டும்.

சப் இனிஸ்.—உங்கள் தங்கையைக் கொண்டுவந்து சேர்த்துவிடுகி ருேம். வீரசிம்மன்மேல் குற்றச்சாட்டு இருக்கிறதே !

ஜெயந்தன்.—அவன் எவ்வித குற்றவாளியும் அல்ல. இதோ இருங் கள் வருகிறேன் ! (உள்ளே சென்று வந்து) இந்தாருங்கள் இதை வைத்துக்கொள்ளுங்கள் ? (எதையோ சப் இனிஸ் பெக்டர் கையில் கொடுத்துவிட்டு) அவர்கள் இருவரையும் என்னிடம் சேர்க்கவேண்டியது உங்கள் பொறுப்பு.

சப் இனிஸ்.—(அசட்டு சிரிப்புடன்) அதைப்பற்றி உங்களுக்குக் கவலை வேண்டாம். கொண்டுவந்து சேர்க்கவேண்டியது என் பொறுப்பு நான் வரட்டுமா ?

ஜெயந்தன்,—சென்று வாருங்கள் கவனம் இருக்கட்டும்

சப் இனிஸ்.-கவனிக்கிறேனுங்க வரேன் (சப் இனிஸ்பெக்டர் போய் விடுகிருர் ஜெயந்தன் உட்கார்ந்துகொண்டு எதையோ யோசிக்கிருர்.) (காட்சி முடிவு)

## காட்சி 17.

இடம்—தாமரைக் கண்ணன் வீட்டு மர்ம அறை.

(வீரசிம்மன் கயிறல் கட்டப்பட்டு ஒரு புறம் கிடக்கின்றன்—மற்றொரு புறத்தில் திலர்தவதி கவலையுடன் நிற்கிறள்.)

தா. கண்ணன்;—என்ன வீரசிம்மரே ! யார் உம்மை இத்தகைய நிலைமைக்கு கொண்டுவந்தது. எழுந்திரும் !

ஜெயசங்கர்.—ஓய்! எழுந்திரய்யா ! ஒகோ கட்டி இருக்கின்றார்கள் போல் இருக்கு ! ச்சு, ச்சு, மிஸ்டர் அனந்தன் அவிழ்த்து விடுப்பா !

அனந்தன்.—(திருடன்போல் விழித்துக்கொண்டு) நானு ம்மு நீங்க யாருவது அவுருங்க (பரந்தாமனை பார்த்து) மிஸ்டர்! அவருங்கொ !

பரந்தாமன்.—முடியாது.

தா. கண்ணன்.—மிஸ்டர் அனந்தன் அவிழ்கபோறீரு இல்லையா ?

அனந்தன்.—இதோ அவிழ்த்து விடுகிறேன். (வலது கையில் ரிவால்வரை வைத்துக்கொண்டு இடது கையால் பயந்துக் கொண்டே அவிழ்க்கிறான் )

ஜெயசங்.—டே சே பயங்கொள்ளி அவயின்னுசாப்பிட்டுடுவானு? ஒத்திருடா! நான்அவுக்கிரேன். (அனந்தன் சொன்னது போதும் என்று விலகி விடுகிறான். ஜெயசங்கர் அவிழ்க்கிறான். வீர சிம்மன் எழுந்து நிற்கிறான்.)

தா. கண்ணன்.:(கேலியாக) எழுந்திருப்பதை பார்த்தாலே சிம்பம் போல் இருக்கிறதே (வேணும் என்றே மார்பின்மேல் ஓர் தட்டு தட்டி) குள்ளா! டேய் ! ஐயாவை கவனிடா !

குள்ளன்.—இதோ வந்தாட்டேனுங்கொ.

வீரசிம்மன்.—நீயும் ஆண்பிள்ளைதானே ? நீயே கவனிக்கலாம்.

தா. கண்ணன்.-என்ன மமதையடா உனக்கு! (வீரசிம்மன் தவடையின்மேல் ஓர் அறை கொடுக்கிறான். வீரசிம்மன் தாமரை கண்ணனை அடிக்க முயற்சிக்கிறான். இதற்குள் இருவர் வீரசிம்மனைப் பிடித்துக்கொள்கிறார்கள் )

வீரசிம்மன்.—எனது ஆவி என் உடலைவிட்டு நீங்கினாலும் சரி உனக்கு அஞ்சுவேன் என்று நெஞ்சத்திலும் நினைக்காதே?

ஜெயசங்கர்.—கவலை படாதீர்! கூடிய சீக்கிரத்தில் உங்கள் ஆவி நீங்கிவிட போகிறது.

திலர்தவதி —(அழுகையும் ஆத்திரமும் கலந்த குரலில்) படுபாவிகளே, எனக்கு எவ்வித தீங்கை வேணுமானாலும் செய்யுங்கள் ! என் காதலரைத் துன்பத்திற்கு ஆளாக்காதீர்கள் !

தா. கண்ணன்-—(திலர்தவதியை பார்த்து) அவன் உயிர் உன்கையில் தான் இருக்கிறது. நீ மட்டும் சம்மதித்தால் அவனை இப்பொழுதே விட்டுவிடுகிறேன்.

திலர்தவதி.—எதற்கு சம்மதிக்க வேண்டும் ?

தா. கண்ணன்.—என்னை மணப்பதற்கு !

திலர்தவதி.—ஆ !, அட படுபாவி,! உன் கனவு வீணாகப்போயிடும் ! அந்த பாக்கியம் உனக்கு இந்த ஜென்மத்தில் கிடையாது !

தா. கண்ணன்.–(ஆர்வத்துடன் கைகொட்டி சிரித்துவிட்டு) அந்த பாக்கியம் உனக்கு இந்த ஜென்மத்தில் கிடையாது. "ஹா–ஹா–ஹா" (சிரிப்பு) அடியே என்ன சொன்னாய் அந்த பாக்கியம் உனக்கு இந்த ஜென்மத்தில் கிட்டாது! ஹா–ஹா–ஹா இனி நீ என் கைபந்து என்று நினைத்துக் கொள். இந்திர, தந்திர, மகேந்திர ஜாலம் கற்றவனாய் இருந்தாலும் சரி இனி உன்னை என்னிடமிருந்து மீட்கமுடியாது. சற்று முன் உன் காதலன் என்று சொன்னாயே ஹா-ஹா ஹா–ஹா காதலன் இக்காதகனா உனது காதலன்! உன் காதலனின் உயிர் இன்னும் கால் நாழிகையில் காலன் அடியை அடையப்போகிறது பார், பார், பாரடி பார். டேய் குள்ளா; (குள்ளன் ஓடிவந்து எதிரில் நிற்கிறான்) இவனை கொண்டுபோய் அவ்வறையில் தள்ளிப்பூட்டுங்கள். பல நாள் பகையை படி சூரணம் செய்து விடுகிறேன். (திலர்தவதி இருக்கும் இடத்தை பார்த்து) இவளை என் தங்கையிடம் ஒப்படைத்து அவள் இருக்கும் இடத்தைச் சுற்றி இருவர் காவல் இருங்கள். (தாமரைக்கண்ணனும் அவன் நண்பர்களும் போகிறார்கள் வீரசிம்மனையும் திலர் தவதியையும் அருகில் இருந்தவர்கள் இழுத்துச்செல் கிறார்கள்)

## காட்சி. 18.

### இடம் தாமரைக்கண்ணன் வீடு

தாமரைக்கண்ணன் தங்கை வனிதா, திலர்தம்

வனிதா.–(நாற்காலியில் திலர்தவதி உட்கார்ந்துக்கொண்டிருக் கிறாள். வனிதா கண்ணாடியில் முகத்தைபார்த்துக்கொண்டு) என்னங்க பேசாம எதோ துக்கத்தை அனுபவிக்கரவுங்க மாதிரி உட்கார்ந்திருக்கீங்களே! என்ன நடந்தது? நீங்க எப்படி இங்கவந்தீங்க? இதல்லா கொஞ்சம் விவரமா சொல்லுங்க, நான் உங்களுக்கு வேண்டிய உதவியை செய்கிறேன். (கண்ணாடியில் முகத்தை பார்த்துக்கொண்டிருந்த வள் திலர்தவதி அருகில் வந்து) இதோபாருங்க எனக்கும் என் அண்ணனுக்கும் எள் அளவு கூட ஆகாது. அவன் முதல் தாரத்துப்பிள்ளை. நான் இரண்டாம் தாரத்துப் பெண் என்னுடைய ஏழு வயதுக்கெல்லாம் அப்பாவையும் அம்மாவையும் ஊருக்கு அனுப்பிவிட்டேன், அதில் இருந்து இந்த படுபாவியிடம் தான் அவஸ்தை படுகிறேன் தங்கையையே பலவந்தப்படுத்திய அவன் உங்களை இங்கு இட்டு வந்தது எனக்கு சந்தேகமாக இருக்கிறது. உண்மையை சொல்லுங்கள்; உங்களுக்கு வேண்டிய உதவியை செய்கிறேன்.

தி. வதி.—(கவலையுடன்) நீயும் என்னை போன்ற பெண்தானே; இந்த முரடர்கள் இடத்தில் நாம் என்ன செய்வது!

வனிதா.—அப்படி நினைக்காதீங்க! விஷயத்தை சொல்லுங்க!

தி. வதி.—(சலிப்புடன்) என்ன சொல்ரது? உன் அண்ணன் என்னை விவாகம் செய்துக்கொள்கிருயா என்று கேட்டான் நான் முடியாது என்றேன் இதை முன்னிட்டு என் காதலருக்கும் உன் அண்ணனுக்கும் எத்தனையோ இடங்களில் கைகலந்தும் இருக்கிறது

வனிதா.—என்ன உங்கள் காதலரா! அவர் யார்?

தி. வதி.—(வருத்தத்துடன்) சொல்ல மாட்டேனு அவர் பெயர் வீரசிம்மர், நானும் அவரும் ஒரே கல்லூரியில் ஒரே வகுப்பில் படித்தோம். எங்கள் மீது பகைமை கொண்ட உன் அண்ணன் தந்திரத்தால் தன் ஆட்களைவிட்டு, நேற்று இரவு 8மணிக்கு நான் ஆள் நடமாட்டம் இல்லாத பாதையில் தனியே வரும்போது என் வாயில் துணியை அடைத்து காரில் ஏற்றிக்கொண்டு வந்தான். அவரை எவ்வாரு இங்கு கொண்டுவந்தானே. அதோடு அவரை கொலை செய்வதாகவும் கூறுகிருன். இன்னேரம் அவர்கதி என்ன ஆயிற்ருே! (அருகில் இருந்த பெஞ்சின் மேல் சாய்ந்து விசனப் படுகிருள்)

வனிதா.—நீங்கள் கவலைப்படுவதைப்பார்த்தால் எனக்கு ரொம்பவும் கஷ்டமாக இருக்கிறது, நீங்கள் இந்த யிடத்தை விட்டுத் தப்பித்துக்கொண்டு போக எனக்கு ஒரு வழியும் தெரியவில்லை.

தி. வதி.—வழி தெரிந்தால் தான் என்ன பயன்! என்னைக்காணேம் என்று என் அண்ணன் கவலைப்படுவாரே என்பதுகூட எனக்கில்லை. தாணிபதிதான் எப்படி தவிக்கிருரோ ?

வனிதா.—யாரு தாணிபதியா! அவரைப்பத்தி உமக்கு எப்படி தெரியும் ?

தி. வதி.—அவர் வீரசிம்மனுக்கு ஆருயிர் தோழர் அதோடு எனக்கு உறவினரும் கூட.

வனித.—அப்படியா! அப்போ எனக்கு ஒருகடிதம் எழுதி கோடுங்க! நான் அதை அவரிடம் கொடுத்து உடனே அவரை அழைத்துவருகிறேன். (சந்தோஷத்துடன்) எனக்கும்அவரை தனியாக சந்திக்கவேண்டும் என்னும் எண்ணமும் உண்டு.

தி. வதி.—அவரைத் தனியாக சந்திக்கவேண்டுமா! எதற்கு?

வனிதா.—எல்லாம் உங்களைப்போலதான் அதைப்பற்றி பிறகு பேசிக்கொள்ளலாம் நீங்கள் முதலில் கடிதத்தைப் பூர்த்தி பண்ணுங்கள்.

தி. வதி. (ஓர்கடிதத்தை எழுதிக்கொடுத்து) இந்தாருங்கள் இதைக் கொண்டுபோய் கொடுத்தீர்களானல் அவர் என்னசொல்கிருரோ அதை அப்படியே இங்கு வந்துசொல்லுங்கள். ம்ம்.

வனிதா.-சரி, அப்படியே சொல்கிறேன் வரட்டுமா.

தி. வதி.-போயிட்டுவாருங்கள்.

வனிதா.-ஜாக்கிரதையாக இருங்க. இதோபோய் வந்துவிடுகிறேன் [வனிதா போகிருள் திலர்தம் துக்கத்துடன் எதையோ யோசிக்கிருள்.]

## காட்சி 19.

### இடம் தாணிபதியின் வீடு

தாணிபதியும் ஜெயந்தனும் மாடியில் உள்ள ஓர் அறையில் உட்கார்ந்துக்கொண்டு வீரசிம்மனைபற்றி யோசிக்கிருர்கள்.

ஜெ.-(தலைமீது கையை வைத்து தலையை கவிழ்த்துக்கொண்டிருக்கும் தரணிபதியை பார்த்து) நீங்கள் நேற்றே திரும்ப சந்தர்ப்பம் இல்லை போல்இருக்கு.

த. பதி.-ஆம் சந்தர்ப்பம் குறைவாய் இருந்ததால்தான் வரத் தடைப்பட்டது.

ஜெ.-வீரசிம்மனையும் திலர்தவதியையும்பற்றி உமது அபிப்பிராயம்?

த. பதி.-அவர்கள் இருவரும் திருட்டுத்தனமாய் வெளியேற வேண்டிய 'அவசியம் இல்லை என்பது தான்.

ஜெ.- கமலக்கண்ணன் கொலை!

த. பதி.- அது வீரசிம்மன் செய்தது அல்ல.

ஜெ.- பின் யார் செய்தது?

த. பதி.-(அருவெறுப்பாக) அதைப்பற்றி இப்பொழுது தெரிந்துக் கொள்ளவேண்டிய அவசியம் இல்லை. கூடிய சீக்கிரத்தில் தெரிந்துக்கொள்வீர்கள். (கவலையுடன் அல்லது அழும் குறவில்) நான் அவரை என் நண்பர் என்று கருதவில்லையே! என் சகோதரன் என்று நினைத்திருந்தேனே! அறிவும் ஆற்றலும் அழகும் உடைய அவரை நான் எப்பொழுது காண்பது? (கம்பீரத்துடன்) முதலாளித்துவ படுபாவிகளின் ஆட்சியில் (கவலையுடன்) ஏழைகளின் கண்ணீரைத்துடைக்க எவரையும் காணேமே! (கம்பீரமா) ஜெயந்தரே வீரசிம்மரும் திலர்தவதியும் எங்கிருந்தபோதிலும் சரி என் உயிரையே கொடுத்தாவது அவர்கள் உயிரை மீட்பது திண்ணம். அவர்கள் இன்பத்தைக்கண்டுகளித்த நான் இப்பொழுது அவர்கள் என்ன துன்பத்தை அடைகிருர்களோ என்று எங்குகிறேன். முதலாளித்துவத்தின் கூட்டத்தை சேர்ந்த அந்தபடுபாவிகளை முறியடித்து ஏழை என்நண்பர் வீரன், தீரன் பராக்கிரமசாலி வீரசிம்மனைக்காப்பாற்றுவேன்.

ஜெ.—என்ன நீங்கள் சொல்வது விளங்க வில்லையே!

த. பதி.—தானாக விளங்கும்.
(வனிதா இவர்கள் இருக்கும் இடத்திற்கு வருகிறாள்.)

வனிதா.—வணக்கம் தோழரே.

த. பதி.—வணக்கம் வனிதா! வா. உட்கார், எது இந்த ஏழையின் மீது இரக்கம் வைத்து இவ்வளவு தூரம் வந்தது.........

வனிதா.—காரியம் இல்லாமல் வருவேனா? உம்மிடம் நான் தனித்து பேசவேண்டும்!

த. பதி.—பாதகமில்லை இங்கேயே சொல்லலாம்

வனிதா.—இல்லை, தனிமையில்தான் பேசவேண்டும் வெகு அவசரம்.

த. பதி.—சரி எழுந்திரு (ஜெயந்தனை பார்த்து) இருங்கள்! இதோ வந்து விடுகிறேன். (இருவரும் அடுத்த அறைக்கு போகிறார்கள். வனிதா கடிதத்தைகொடுக்கிறாள் தரணிபதி படித்து பார்த்துவிட்டு வெகுஆனந்தத்துடன் வனிதாவைபார்த்து) வனிதா நீ இப்பொழுது எங்களுக்கு செய்த உதவிக்கு நாங்கள் என்ன கைம்மாறு செய்யப்போகிறோம்.

வனிதா.—இருக்கிறது.

த. பதி.—(சிரித்துக்கொண்டு) என்ன?

வனிதா.—நீங்கள் உண்மையில் செய்வீர்களாயென்பது தெரிய வேண்டுமே.

த. பதி.—நிச்சயமாகச்செய்வேன், (கொஞ்சுவதுபோல்) சொல்லு.

வனிதா.—என்னை யேற்றுக்கொள்ள..........................?

த. பதி.—தடையே இல்லை. (அவளை அணைத்து ஓர் முத்தம் கொடுத்துவிட்டு) பிறகு யோசித்துக்கொள்ளலாம் வாபோகலாம். (ஜெயந்தன் இருக்கும் இடத்திற்கு வந்து) ஜெயந்தரே வெற்றி! வெற்றி!! இனி எனக்கு நிகர் எவரும் இல்லை. (வனிதாவை பார்த்து) வனிதா! இப்பொழுது மணி ஆறு ஆகிறது. மணி ஒன்பதுக்குள் வருகிறேன் என்று சொல் சென்றுவா. (வனிதா போகிறாள்)

ஜெ.—வெற்றியுடன் திரும்புங்கள் நான் வருகிறேன்.

த. பதி.—சென்று வாருங்கள். (ஜெயந்தன் போன பிறகு தரணிபதி தனிமையில் அக்கடிதத்தைப்படித்துப் படித்து மகிட்சி அடைந்தான். கெடிகாரத்தை பார்த்து மணி ஒன்பது ஆனதால் இனி தாமதிக்க கூடாது என்று கிளம்புகிறான்)

## காட்சி. 20.

இடம்—தாமரைக் கண்ணன் வீடு
நேரம்—இரவு மணி 10

(தாணிபதி.—தாமரைக்கண்ணன் வீட்டுப்பின் புறம் வந்து உள்ளே போவதற்கு வழி இருக்கின்றதா என்று சுற்றி சுற்றிபார்க்கிறுன் இரண்டு பக்கமும் வாயர்படி அருகில் சில ஆட்கள் உட்கார்ந்துக்கொண்டு பேசிக்கொண்டிருக்கிறுர்கள். ஓர் செடியருகில் நின்றுக்கொண்டு எப்படிப்போவது என்றுயோசிக்கிறுன். அப்பொழுது மெத்தை மீதிருந்து ஓர் காகிதத்தால் சுற்றப்பட்ட கயிறு வந்துவிழுகிறது. உடனே மெத்தைமீது பார்க்கிறுன் வனிதா நின்றுக்கொண்டிருக்கிறுள். அவளைக்கண்டதும் கயிற்றை எடுத்துக்கொண்டு அவளைப்பார்த்துக்கொண்டே தன்கைக்கு ஓர்முத்தம் கொடுக்கிறுன் அவளும் தன்கைக்கு ஓர்முத்தம் கொடுத்துக் கொள்கிறுள் உடனே தரணிபதி பின்புறத்தில் எரிந்துக் கொண்டிருந்த ஓர் மின்சார விளக்கருகில் சென்று கடிதத்தை படிக்கிறுன் அதில்...........

அன்பும் அருளும் வாய்ந்த ஆருயிர் தோழரே வணக்கம். நீர் நின்றுக்கொண்டிருக்கும் இடத்திற்கு நேராக ஓர் மரம் இருக்கிறது அதன் மீதுஏறி மெத்தை பக்கமாக வளைந்துவரும்கிளையில் கயிற்றைக்கட்டி கயற்றை பிடித்துக்கொண்டு உ சா லா டி ஞல் மாடிக்கு வரலாம். மற்றவை நேரில்.

உமது ஆருயிர், வனிதா.

அதை படித்த தரணிபதி அளவிலா மகிழ்ச்சியோடு. அக் கடிதத்துக்கு ஓர் முத்தம் கொடுத்து வைத்துக்கொண்டு மரத்தின் மேல் ஏறி கயிற்றைகட்டி அதின்மூலமாக மாடிக்கு சென்றுன். வனிதா வரவேற்றுள்.

த. பதி.—திலர்தம் எங்கே வனிதா?

வனிதா.—அவசரப்படாமல் வாருங்கள்! காட்டுகிறேன்! (அவன் காதில் ஏதோ சொல்லுகிறுள். அதை கேட்டுக்கொண்டு தரணிபதி ரிவால்வரை எடுத்துக்கொண்டு வேகமாக மெத்தை படிகட்டைவிட்டு இறங்கிவருகிறுன். அதற்கடுத்தார்ப் போல் ஓர் அறை தெரிகிறது அதில் இருவர் பேச்சுக்குரல் கேட்கிறது அதை உற்று கவனிக்கிறுன்)

தா. க.—திலர்தம் நான் சொல்வதை யோசித்து பதில் சொல் வீரசிம்மனை கொலையாளி என்று குற்றம் சாட்டி சப் இனிஸ்பெக்டர் அழைத்துக்கொண்டு போய் விட்டார் சப் இனிஸ்பெக்டருக்கு இதற்காக ரூபாய் 500 கொடுத்திருக்கிறேன். இனி அவனுக்கு மரண தண்டனைதான் இனியாவது நீ இணங்குகிருயா? இல்லையா?

தி. வதி.—உனக்கு இணங்குவதா இந்த ஜென்மத்தில் இல்லை. உனக்கு இணங்காததற்கு எனக்கும் மரண தண்டனை கொடுத்துவிடு.

த. கண்—உனக்கு மரணதண்டனை கொடுக்க அழைத்துவரவில்லை மணம்செய்துகொள்ளதான் அழைத்துவந்தேன். என் வீட்டில் இருக்கும் உன்னை சம்மதம் வேறு கேட்க வேண்டுமோ! (கையை பிடித்திழுத்து) படுக்கையில் வந்துபடு

தி. தம்.—(திலர்தம் தாமரைகண்ணனை தவடைமேல் ஓர் அறை கொடுத்து) நீ என்னை கத்தியால் வெட்டினாலும் சரி, உன் எண்ணம் ஈடேறும் என்று நினைக்காதே.

தா. கண்ணன்.—(உரையில் இருந்த ரிவால்வரை எடுத்துக்கொண்டு படுக்கையைகாட்டி) மறியாதையாக போகிறாயா? அல்லது!

திலர்தம்.—என்ன! சுடத்தானே போகிறாய். சுட்டுவிடு. உன் இடம் இம்சை படுவதைவிட எனக்கு அதுவே மேலானது.

தரணிபதி.—(இவ்வளவையும் ஜன்னல் வழியாக பார்த்திருந்து விட்டு ரிவால்வரை எடுத்து ஜன்னல்வழியாக காண்பித்து) தாமரைகண்ணா! மறியாதையாக ரிவால்வரை போட்டு விட்டு கையை தூக்கு. திரும்பினாலோ அவ்விடத்தை விட்டு நகன்றாலோ சுட்டுவிடுவேன். (தாமரை கண்ணன் தலையை மட்டும் பின்னால் திருப்பி பார்க்கிறான். ஜன்னலண்டை தரணிபதி ரிவால்வருடன் நிற்பதை கண்டு தன்னிடம் இருந்த ரிவால்வரை தாழே போட்டுவிட்டு கையை தூக்கு கிறான்.)

தரணிபதி.—திலர்தம்! அந்தரிவால்வரை எடுத்துக்கொண்டு கதவை திற. அவன் அசைந்தால் நான் பார்த்துக்கொள்கிறேன். (திலர்தம் கதவைதிறந்து விட்டு தாமரைகண்ணனுக்கு நேராக ரிவால்வரை பிடித்துக்கொண்டு நிற்கிறாள். அறைக் குள் வந்த தரணிபதி கயிற்றால் தாமரை கண்ணனை கட்டுகிறான்) (அங்குவந்துநின்ற வனிதாவை பார்த்து)

தாமரை கண்ணன்.—வனிதா நீயுமாஎன்விரோதி. (வனிதா பேசா மல் நிற்கிறாள் தரணிபதி தாமரைகண்ணனை கட்டித் தள்ளி வாயில் தன் கைகுட்டையை அடைத்து விட்டு யாவருமாக வெளி வந்து மெத்தைபடிகட்டை வனிதாவும். திலர்தவதியும் முன்னேயும் தரணிபதி பின்னேயுமாக எரி வந்தார்கள் பின்னால்இருவர் ஓடிவருவதை கண்ட தரணிபதி திலர்தவதியையும் வனிதாவையும் கயிற்றைப்பிடித்துக் கொண்டு போகச்சொல்லிவிட்டு கதவண்டை நிற்கிறான். தூரத்திவந்த இருவரும் மெத்தை கதவை அடைந்ததும் முன்னேவந்தவனை ஓர் குத்து குத்தினான். அவன் பின்னால்

...ல் மேல் சாயவே இருவரும் உருண்டுவந்து தாழே விழுந்தார்கள் நிலர்தமும் வனிதாவும் மெத்தையை விட்டு வெளியேறியதை கண்ட தரணிபதி தானும் கயிற்றின் உதவியால் மரத்தை அடைந்தான் மூவருமாக இறங்கிவந்து தரணிபதி முன்பே கொண்டுவந்து விட்டிருந்த மோட்டார் சைகளில்ஏறிக்கொண்டு வெகுவேகமாகதரணிபதிவீட்டை அடைந்தார்கள். பின்னால் ஓர் கார் தூரத்திவந்து பயனில்லாமல் திரும்பியது.

## காட்சி. 21.

### இடம்—தரணிபதியின் வீடு

(தரணிபதி சேர் மீது சாய்ந்துக்கொண்டு பேப்பர் படித்துக்கொண்டிருந்தவன் திடீர் என்று எழுந்து கையில் உள்ள கடிகாரத்தைபார்த்துவிட்டு டெலிபோனண்டைபோய் டெலிபோன் நெம்பரைத்தள்ளி) நான் தான் தரணிபதி. மணி– 11½க்கு தீர்ப்பு சொல்வதாக ஜட்ஜ் சொன்னார் நீங்க மணி11க்கெல்லாம் வந்துவிடுங்க. அவ்வளவுதான் நானும் வனிதாவும் இப்படியே வரோம். (ஜெயந்தன் வீட்டில் ஜெயந்தன்) ஆ! கா! வந்து விடுகிறேன் அதைப்பத்தி என்ன.

தரணிபதி.—சரி அவ்வளவுதான் (டெலிபோனை வைத்துவிட்டு) வனிதா, வனிதா

வனிதா.—ஏன் கூப்பிட்டீர்.

தரணிபதி.—சாப்பாடு தயாரு?

வனிதா.—ஆகா! ரெடி.

தரணிபதி.—(சிரித்துக்கொண்டே அவள் மோவாய் கட்டையை ஆட்டி) எப்படி ஆகா! ரெடி.—வா போகலாம் நாழிஆகிறது. (இருவரும் போய்விடுகிறார்கள்.)

## காட்சி. 22.

### இடம்—தாமரைக் கண்ணன் வீடு

தாமரைக்கண்ணன்.—(பின்னால் கை கட்டிக்கொண்டு அங்கு மிங்குமாக நடந்துக்கொண்டு எதையோ யோசித்துக்கொண்டிருந்தவன் ஆத்திரத்துடன்) நம் மீது காதலிக்காத ஒருத்தியை வற்புருத்தியதால் அல்லவா நமக்கு இவ் இழிவு வந்தது (தலைமீது கையை வைத்துக்கொண்டு) படுபாவியாகிய நான் எவ்வளவு கொலைகளைசெய்தேன் எவ்வளவு கன்னிகைகளை கற்பழித்தேன். எவ்வளவு ஏழைகளை மனம் நோவச்செய்தேன் நான் செய்த குற்றத்திற்கு எனக்கு இத்தண்டனை போதாது (கத்தியைஎடுத்துக்கொண்டு) கத்தி! கத்தி! ஆம். கத்தி தேவே நீ தான் எனக்கு தக்க தண்டனை கொடுக்க வேண்டும். பணத்திமிரினால் பாருலகில் மமதைகொண்டு

திரிந்த எனக்கு - பாவையரை கற்பழித்த [illegible] யின் கண்ணீரை கண் எடுத்தும் பார்க்காத எனக்கு நீதான் தண்டனை கொடுக்கவேண்டும். அய்யோ பரிசுத்தமான மனதையுடைய இளங்காதலரை கண்ணீர் விட துன்பப் படுத்தினேனே, அதற்கு என் ரத்தத்தை சிந்தினாலும் போராதே.— ஆம்! அதுதான் சரி. ஏ கத்தியே? அகப்பட்டுக்கொண்டாயா! நான் சொல்லி நீ எவ்வளவு பேரை கொன்றிருப்பாய். இப்பொழுதும் நான் தான் சொல்லுகிறேன். என்னை கொலை செய்.—இரு! இரு! இதோவந்து விட்டேன். என் தங்கையையும் தாணிபதியையும் மனமாற வாழ்த்திவிட்டு வருகிறேன் (டெலிபோன் அருகில் ஓடிப்போய் தாணிபதியை கூப்பிட்டு) என்னதாணிபதி தெரியலே நான்தான் தாமரைக்கண்ணன் என் தங்கையும் நீயுமாக சுகமாக வாழுங்கள். இந்த ஜமீனை ஏழை பாட்டாளி மக்களுக்கு இனமாகப் பிரித்துக்கொடுங்கள். கவர்மென்டில் ஜமீனுக்கென்று கொடுக்கப்படும் பணத்தை வாங்காதே அது மறுபடியும் ஏழைகளின் தலைமீதடிக்க ஏதுவாகும். அதனால் முதலாளித்துவ முரடர்களின் கூட்டம் மறுபடியும் வளரும். என் ஆயுள் இதோடு முடிவடைகிறது. என் கையில் உள்ள கத்தி கழுத்தை அணுகி விட்டது ஆ......(கத்தியால்குத்திக்கொண்டு இறக்கிறான்.)

## காட்சி. 23.

### தாணிபதியின் வீடு

(அதுவரை டெலிபோன் அருகில் நின்றுக்கொண்டு கேட்டுக் கொண்டிருந்த தாணிபதிக்கு ஆ.........என்னும் சப்தம் கேட்டதும் இறந்துவிட்டான் என்பது அறிந்து அழுதுக் கொண்டே.)

தாணிபதி.-வனிதா! வனிதா!! வனிதா!!!

வனிதா.-அடடே! இன்ன அழரிங்க?

தரணிபதி.-உங்க அண்ணே இறந்தூட்டார்.

வனிதா.-என்ன, பயித்தியமா இன்ன உங்களுக்கு.

தாணிபதி.-இல்லை இப்பொழுது தான் டெலிபோனில் என்னை கூப்பிட்டு பேசிவிட்டு கத்தியால் குத்திக்கொண்டார். அந்த சப்தமும் கேட்டது.

வனிதா.-தினையை விதைத்தவன் தினையை அறுத்தால் வினையை விதைத்தவன் வினையை அறுப்பான்னு பெரியவங்க பழமொழி. அதற்கு நாம் என்ன பண்ணுவது. ஒக்காந்திகிட்டு அழரீங்களே. (தெருப்பக்கம் வராண்டாவில் யாரோபேசும் சப்தம் கேட்டது. வனிதா எட்டிபார்த்துவிட்டு ஜெயந்தன் வந்துவிட்டார். கோர்ட்டுக்குபோகநாழி ஆச்சி வாங்கபோகலாம்)

## காட்சி. 24.

இடம்—ஐகோர்ட்—ஜட்ஜ் தீர்ப்பை படிக்கிறர்

இங்கு கூடியிருக்கும் மகா ஜனங்களே! இதுவரை விசாரித்ததில் கிளார்க்கு குப்புசாமியின் மனைவியின் சிநேகத்தால் ஏற்பட்ட பகைக் காரணமாக தாமரைகண்ணன் தன் ஆள் குள்ளனை அனுப்பி கமலக்கண்ணனை கொலைச்செய்யச் சொன்னதாக தெரியவருகிறது. இதற்குமுன் நடந்திருக்கும் ஏழு கொலைகளுக்கும், இவர்களே காரணம் என்றும் தெரிகிறது. குள்ளனும் இதை ஒத்துக்கொள்ளுகிறுன். ஆகையால் அவனுக்கு ஆயுள் தண்டனை கொடுக்கப்பட்டிருக்கிறது. ஷை கேசில் சப் இனிஸ்பெக்டர் சங்காதேவரானவர் கமலக்கண்ணன் தகப்பனரிடத்தில் உமது மருமகள் மீது குற்றம் சாட்டி ஒழித்து விடுகிறேன் என்று ரூபாய் 100–ம், ஜமீன்தார் ஜெயந்தனிடம் உமது தங்கையையும் வீரசிம்மனையும் எவ்வித குற்றத்துக்கும் ஆளாக்காமல் கொண்டுவந்துசேர்பிக்கிறேன் என்று ரூபாய் 200–ம், ஜமீன்தார் தாமரைகண்ணனிடத்தில் வீரசிம்மன் மீது குற்றம் சாட்டி மரணதண்டனையே தருகிறேன் என்று ரூபாய் 500–ம், லஞ்சம் வாங்கிஇருக்கிறுர். சட்ட விரோதமாக லஞ்சம்வாங்கி கேஸை அமுக்கியதால் ஷையாருக்கு வேலையை டிஸ்மிஸ் செய்ததோடு மூன்று வருட கடுங்காவலும் லஞ்சம் வாங்கிய ரூபாயை திருப்பிக்கொடுக்கும்படியும் உத்திரவிட்டிருக்கிறேம்.

ஷை கொலைவழக்கில் கமலக்கண்ணன் தகப்பனர் தன்மகன் இறந்து போய்விட்டதால் மருமகள் சொத்தில் பாதியை அபகரிப்பாள் என்றும் இப்பொழுது நடக்கும் விதவை விவாகத்தில் தானும் கலந்துக்கொள்ளுவாள் என்றும் அஞ்சி சப் இனிஸ்பெக்டருக்கு லஞ்சம் கொடுத்து இவள் மீது பொய் குற்றம் சாட்டியதால் அவருக்கு ஆறுமாத தண்டனையும் மொத்த சொத்தின் முழுஉரிமையும் மருமகளாகிய அன்னம்மாளுக்கும் கொடுக்கப்பட்டது.

ஜமீன்தார் தாமரைகண்ணன் தான் செய்த தவறை உணர்ந்து தற்கொலை செய்துக்கொண்டதால் அந்த ஜமீனின் முழுஉரிமையும் ஷையார் வார்ஸ்தாரும் தங்கையுமான வனிதாவுக்கு கொடுக்கப்பட்டது.

வீரசிம்மன் குற்றவாளி அல்ல. நிரபராதிஎன்று தீர்மானித்து விடுதலை செய்யப்பட்டார்,

(இத்துடன் தீர்ப்பு முடிவடைந்தது.) எங்கு பார்த்தாலும் வீரசிம்மர் வாழ்க! தாணிபதி வாழ்க! என்று வாழ்த்துக் குரல் கேட்டது. கூட்டம் கலைந்தது.

திரை விழுந்தது.

## காட்சி. 25.

வாழ்க்கை ஒப்பந்தம்.

இடம்—ஜெயந்தன் வீடு

(பல பெரியோர்களுக்கு நடுவில் வீரசிம்மனுக்கும் திலர்தவதிக்கும், தாணிபதிக்கும் வனிதாவுக்கும், வாழ்க்கை ஒப்பந்தம் நடக்கிறது)

தலைமை வகித்தவர்.—தோழர்களே தாய்மார்களே! இத்திருமணத்தை நான் இருந்து நடத்துவேன் என்று என்நெஞ்சத்திலும் நினைக்கவில்லை. தற்செயலாக கிடைத்த இந்த நற்செயலுக்கு மன மகிழ்ச்சி அடைகிறேன். மணமக்கள் நீடூழிவாழ்வார்களாக. (அமருகிறார் மணமக்கள் எழுந்திருக்கிறார்கள்)

வீரசிம்மன்.—இங்கு அமர்ந்திருக்கும் பெரியோர்களின் முன்பாக இம்மங்கை திலர்தவதியை நான் என்மனைவியாக ஏற்றுக் கொள்ளுகிறேன்.

திலர்தவதி.—நான் இவருடன் என் ஆயுள் பரியந்தம் ஒத்துவாழ சம்மதிக்கிறேன்.

தாணிபதி.—அறிவிலும் ஆற்றலிலும், அங்க அமைப்பிலும் எனக்கேற்றவளான இன்நங்கை வனிதாவை என் மனப்பூர்வமாக மனைவியாக ஏற்றுக்கொள்ளுகிறேன்.

வனிதா.—வீர, தீர, மனோதிடமுடைய இவரை இன்று முதல் என் தலைவராக ஏற்றுக்கொள்ளுகிறேன்.

ஜெயந்தன்-மெய் அன்பர்களே! ஒவ்வொரு இல்லத்திலும் இத்தகைய சீர்திருத்த திருமணம் நடைபெறவேண்டும். நடுவில் வந்த அநாகரீகவழக்கங்களை எல்லாம் எடுத்தெறியவேண்டும்.— அன்பர்களே! மணத்தில் கலப்பு மணம் தான் மேலானது. இதை யாவரும் தெரிந்துக்கொள்ளவேண்டியது அவசியமானது ஆகையால் இனியாவது திருட்டுப்பயல்கள் தீட்டிய திராவிடத்தை தாழ்த்திய நூல்களின்படி நடவாமல் இருப்பீர்கள் என்று நினைக்கிறேன். உதாரணமாக இத்திருமணத்தை பாருங்கள். இரண்டும்கலப்புமணமே! இதுதான் ருசிக்கும். பண்டைகாலத்து வழக்கம் இருக்கின்றதே அது ருசிக்காது. இனி விவாகம் செய்துக்கொள்ளப்போகும் வாலிபர்களுக்கும், மங்கையர்க்கும் நான் கூறுவது யாதெனில் திருமணத்தில் காதல்கலப்புமணமே மேலானது என்பதுதான். இதை பின்பற்றுமாறு அவர்களை வேண்டிக் கொள்ளுகிறேன். நிற்க தற்கொலை செய்துக்கொண்ட தாமரைகண்ணரின் விருப்பப்படி அவர் தங்கையால் அவர்கள் ஊர்குடிகளுக்கு அவர்கள் ஜமீனை இனமாக பிறித்துக் கொடுக்கப்பட்டது. இதோடு என்சொற்பொழிவை முடித்துக்கொள்ளுகிறேன்.

கூட்டம் கலைகிறது. நாடகமும் முடிகிறது.

வணக்கம்.

